33 விச்சைதான் இதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாதல் அடியார்தம் அடிய னாக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டான் அமுத மூறி
அகம்நெகவே புகுந்தாண்டான் அன்பு கூர
அச்சன்ஆண் பெண்ணலிஆ காச மாகி
ஆரழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையும் மேனி யெங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே. உகூ

34 தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மற்றை
மூவர்கோன் ஆய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியா ரோடும்
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. ௩௦

## 4. ஆத்தும சுத்தி (35–44)

35 ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை என்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறலறிலைசெய்வதொன் றறியேனே.

36 அறிவி லாதஎனைப்புகுந்தாண்டு கொண்டறிவதை யருளிமேல்
நெறியெ லாம்புல மாக்கிய எந்தையைப் பந்தனையறுப்பானைப்
பிறிவிலாதஇன்னருள்கள் பெற்றிருந்து மாறுடுதிபிணநெஞ்சே
கிறியெ லாம்மிகக் கீழ்ப்படுத் தாய்கெடுத் தாயென்னைக்கெடுமாறே.

37 மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையையெம் மதியிலி
மடநெஞ்சே, தேறு கின்றிலம் இனியுனைச் சிக்கெனச் சிவன
வன் திரள்தோள்மேல், நீறு நின்றது கண்டனை யாயினும்
நெக்கிலை யிக்காயங், கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது
கேட்கவுங் கில்லேனே. ௩௩

38 கிற்ற வாமன மேகெடு வாயுடை யானடி நாயேனை, விற்றெ
லாம்மிக ஆள்வதற் குரியவன் விரைமலர்த் திருப்பாதம்,
முற்றி லாஇளந் தளிர்பிரிந் திருந்துநீ யுண்டன எல்லாமுன்,
136 அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையும் அளவறுக்
கில்லேனே. ௩௪

39 அளவ றுப்பதற் கரியவன் இமையவர்க் கடியவர்க் கெளி
யான்நம், களவ றுத்துநின் றுண்டமை கருத்தினுட் கசிந்
துணர்ந் திருந்தேயும், உளக றுத்துனை நினைந்துளம் பெருங்
140 களன் செய்தது மிலைநெஞ்சே, பளக றுத்துடை யான்கழல்
பணிந்திலை பரகதி புகுவானே. ௩௫

40 புகுவ தாவதும் போதர வில்லதும் பொன்னகர் புகப்
போதற், குகுவ தாவதும் எந்தையெம் பிரானென்னை யாண்
டவன் கழற்கன்பு, நெகுவ தாவதும் நித்தலும் அமுதொடு
144 தேனொடு பால்கட்டி, மிகுவ தாவதும் இன்றெனின் மற்றிதற்
கென்செய்கேன் வினையேனே. ௩௬

41 வினையென் போலுடை யார்பிற ராருடை யானடி நாயேனைத்
தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப் பன்றுமற் றதனாலே
முனைவன்பாதநன் மலர்பிரிந் திருந்தும்நான் முட்டிலேன்தலைகீறேன்
148 இனையன்பாவனை யிரும்புகல் மனஞ்செவி யின்னதென் றறியேனே.

42 ஏனை யாவரும் எய்திட லுற்றுமற் றின்னதென் றறியாத
தேனை ஆன்நெயைக் கரும்பின்இன் தேறலைச் சிவனையென்
சிவலோகக், கோனை மான்அன நோக்கிதன் கூறனைக் குறுகி
152 லேன் நெடுங்காலம், ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு
வேனுயி ரோயாதே. ௩௮

43 ஓய்வி லாதன உவமனில் இறந்தன ஒண்மலர்த் தாள்தந்து,
நாயி லாகிய குலத்தினுங் கடைப்படும் என்னைநன் னெறி
காட்டித், தாயி லாகிய இன்னருள் புரிந்தஎன் தலைவனை நனி
156 காணேன், தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன்
செழுங்கடல் புகுவேனே. ௩௯

44 வேனில் வேள்கணை கிழித்திட மதிகெடும் அதுதனைநினையாதே
மான்நி லாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகித் [ன்
தேன்நி லாவிய திருவருள் புரிந்தவென் சிவனகர்புகப் போகே
160 ஊனில் ஆவியை ஓம்புதற் பொருட்டினும் உண்டுடுத்திருந்தேனே.

## 5. கைம்மாறு கொடுத்தல் (45–54)

45 இருகை யானையை ஒத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெய்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்பன் உண்ணவே. ௪௧

46 உண்டொர் ஒண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே. ௪௨

47 மேலை வானவ ரும்மறி யாததோர்
கோல மேயெனை ஆட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோம்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே. ௪௩

48 காண லாம்பர மேகட் கிறந்ததோர்
வாணி லாப்பொரு ளேயிங்கொர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே. ௪௪

49 போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்தும்நின்
றாற்றன் மிக்கஅன் பாலழைக் கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்ற மன்னதொர் கொள்கையென் கொள்கையே. ௪௫

50 கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறாமலர்க் கொன்றையான்
நள்ளுங் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே. ௪௬

51 எந்தை யாயெம் பிரான்மற்றும் யாவர்க்குந்
தந்தை தாய்தம் பிரான்தனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே. ௪௭

52 செல்வம் நல்குர வின்றிவிண் ணோர்புழுப்
புல்வரம் பின்றி யார்க்கும் அரும்பொருள்

எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்
192 கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே. சஅ

53 கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ
றிட்ட அன்பரொ டியாவருங் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
196 எட்டி னோடிரண் டும்அறி யேனையே. சகூ

54 அறிவ னேயமு தேஅடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டோஎனை ஆண்டது
அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்
200 அறிவ னோவல்ல னோஅரு ளீசனே. ரு0

## 6. அநுபோக சுத்தி (55–64)

55 ஈச னேயென் எம்மானே யெந்தை பெருமான் என்பிறவி
நாச னேநான் யாதுமொன் றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை ஆண்டாய்க்கு நினைக்க மாட்டேன் கண்டாயே
204 தேச னேஅம் பலவனே செய்வ தொன்றும் அறியேனே. ருக

56 செய்வ தறியாச் சிறுநாயேன் செம்பொற் பாத மலர்
காணாப், பொய்யர் பெறும்பே றத்தனையும் பெறுதற் குரி
யேன் பொய்யிலா, மெய்யர் வெறியார் மலர்ப்பாதம் மேவக்
208 கண்டுங் கேட்டிருந்தும், பொய்ய னேன்நான் உண்டுடுத்திங்
கிருப்ப தானேன் போரேறே. ருஉ

57 போரே றேநின் பொன்னகர்வாய் நீபோந் தருளி யிருள்நீக்கி,
வாரே றிளமென் முலையாளோ டுடன்வந் தருள அருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதஞ் சேரக் கண்டுங் கண்கெட்ட
212 ஊரே றாயிங் குழல்வேனோ கொடியேன் உயிர்தான் உலவாதே.

58 உலவாக் காலந் தவமெய்தி உறுப்பும் வெறுத்திங் குனைக்
காண்பான், பலமா முனிவர் நனிவாடப் பாவி யேனைப் பணி
கொண்டாய், மலமாக் குரம்பை யிதுமாய்க்க மாட்டேன்
216 மணியே உனைக்காண்பான், அலவா நிற்கும் அன்பிலேன்
என்கொண் டெழுகேன் எம்மானே. ருச

59 மானேர் நோக்கி உமையாள் பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே அமுதே கரும்பின் தெளிவே சிவனே தென்தில்லைக்

கோனே உன்தன் திருக்குறிப்புக் கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்ப தானேன் உடையானே.

60 உடையா னேநின் றனையுள்கி உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதஞ் சேரக் கண்டிங் கூர்நாயிற்
கடையா னேன்நெஞ் சுருகாதேன் கல்லாமனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்பதாக முடித்தாயே.

61 முடித்த வாறும் என்றனக்கே தக்க தேமுன் னடியாரைப்
பிடித்த வாறுஞ் சோராமற் சோர னேனிங் கொருத்திவாய்
துடித்த வாறுந் துகிலிறையே சோர்ந்தவாறும் முகங்குறுவேர்
பொடித்த வாறுமிவை யுணர்ந்துகேடென் றனக்கே சூழ்ந்தேனே.

62 தேனைப் பாலைக் கன்னலின் தெளியை யொளியைத்
தெளிந்தார்தம், ஊனை உருக்கும் உடையானை உம்ப ரானை
வம்பனேன், நானின் னடியேன் நீயென்னை யாண்டா யென்
றால் அடியேற்குத், தானுஞ் சிரித்தே யருளலாந் தன்மை
யாமென் தன்மையே. ருஅ

63 தன்மை பிறரா லறியாத தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை ஆண்டையா புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே யென்நான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி யெந்தா யெங்குப்புகுவேனே.

64 புகுவே னெனதே நின்பாதம் போற்றும் அடியா ருள்நின்று
நகுவேன் பண்டு தோணோக்கி நாண மில்லா நாயினேன்
நெகுமன் பில்லை நினைக்காண நீயாண் டருள அடியேனுந்
தகுவ னேயென் தன்மையே எந்தாய் அந்தோ தரியேனே.

## 7. காருணியத்திரங்கல் (65-74)

65 தரிக்கிலேன் காய வாழ்க்கை சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள் விடலையே போற்றி ஒப்பில்
ஒருத்தனே போற்றி உம்பர் தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள் நின்மலா போற்றி போற்றி.

66 போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை

போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
248 போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி. ௬௨

67 போற்றியென் போலும் பொய்யர் தம்மையாட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப் புதுமதுப் புவனம் நீர்தீக்
252 காற்றிய மானன் வானம் இருசுடர்க் கடவு ளானே. ௬௩

68 கடவுளே போற்றி யென்னைக் கண்டுகொண் டருளு போற்றி
விடவுளே உருக்கி யென்னை ஆண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை உம்பர்தந் தருளு போற்றி
256 சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி. ௬௪

69 சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா அல்குற் செவ்வாய் வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க போற்றி மால்விடை யூர்தி போற்றி
260 இங்கிவாழ் வாற்ற கில்லேன் எம்பிரான் இழித்திட் டேனே.

70 இழித்தனன் என்னை யானே எம்பிரான் போற்றி போற்றி
பழித்திலேன் உன்னைஎன்னை ஆளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர்கடமைபோற்றி
264 ஒழித்திடிவ் வாழ்வு போற்றி உம்பர்நாட் டெம்பி ரானே. ௬௬

71 எம்பிரான் போற்றி வானத் தவரவர் ஏறு போற்றி
கொம்பரார் மருங்குல் மங்கை கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத் திருச்சிற்றம் பலவ போற்றி
268 உம்பரா போற்றி என்னை ஆளுடை ஒருவ போற்றி. ௬௭

72 ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
272 தருகநின் பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே.

73 தீர்ந்தஅன் பாய அன்பர்க் கவரினும் அன்ப போற்றி
பேர்ந்துமென் பொய்ம்மையாட்கொண் டருளிடும்பெருமைபோற்றி
வார்ந்தநஞ் சயின்று வானோர்க் கமுதம்ஈ வள்ளல் போற்றி
276 ஆர்ந்தநின் பாதம் நாயேற் கருளிட வேண்டும் போற்றி. ௬௯

74 போற்றியிப் புவனம் நீர்தீக் காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்றம் ஆகிநீ தோற்ற மில்லாய்
போற்றியெல் லாவு யிர்க்கும் ஈறாயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்கள் நின்னைப் புணர்கிலாப் புணர்க்கையானே.

## 8. ஆனந்தத் தழுந்தல் (75-84)

75 புணர்ப்ப தொக்க எந்தை யென்னை யாண்டு பூணநோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்றபோது நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக அன்றி தாக அன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக அங்க ணாள புங்க மான போகமே. ௭௧

76 போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி யின்பமும்
ஏக நின்க ழலிணைய லாதி லேனென் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை யாற தாக ஐயனே. ௭௨

77 ஐய நின்ன தல்ல தில்லை மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை பொய்ம்மை யேனென் எம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்ப ரன்பெ னக்கு மாக வேண்டுமே. ௭௩

78 வேண்டும்நின்க ழற்க ணன்பு பொய்ம்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை ஆவ வென்ற ருளுநீ
பூண்டுகொண்டடியனேனும் போற்றிபோற்றி யென்றுமென்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின்வ ணங்கவே. ௭௪

79 வணங்கும்நின்னை மண்ணும்விண்ணும் வேதம்நான்கும் ஓலமிட்
டுணங்கு நின்னை எய்த லுற்று மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க என்கொ லோநி னைப்பதே.

80 நினைப்ப தாக சிந்தை செல்லு மெல்லை யேய வாக்கினால்
தினைத்த னையு மாவ தில்லை சொல்ல லாவ கேட்பவே
அனைத் துலகு மாய நின்னை ஐம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெ னைத்த தெப்புறத்த தெந்தை பாத மெய்தவே.

81 எய்த லாவ தென்று நின்னை யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்க ணன்றி மற்றொ ருண்மை யின்மையிற்

பைத லாவ தென்று பாது காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்க ணொன்றும் வண்ண மில்லை யீசனே. ௭௭

82 ஈச னேநீ அல்ல தில்லை இங்கும் அங்கு மென்பதும்
பேசி னேனொர் பேத மின்மை பேதை யேனென் எம்பிரான்
நீச னேனை ஆண்டு கொண்ட நின்ம லாவொர் நின்னலால்
தேச னேயொர் தேவ ருண்மை சிந்தி யாது சிந்தையே. ௭௮

83 சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரில் ஐம்பு லன்களால்
முந்தை யான காலம் நின்னை எய்தி டாத மூர்க்கனேன்
வெந்தை யாவி ழுந்தி லேனென் உள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை யாய நின்னை யின்னம் எய்த லுற்றி ருப்பனே. ௭௯

84 இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை ஆண்டுகொண்ட நின்னதாட்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ னைக்க லந்து போகவும்
நெருப்பு முண்டு யானு முண்டி ருந்த துண்ட தாயினும்
விருப்புமுண்டு நின்கண் என்கண் என்பதென் அவிச்சையே.

## 9. ஆனந்த பரவசம் (85–94)

85 விச்சுக் கேடுபோய்க் காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானா ரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்
அச்சத் தாலே ஆழ்ந்திடு கின்றே னாரூரெம்
பிச்சைத் தேவா என்னான் செய்கேன் பேசாயே. ௮௧

86 பேசப் பட்டேன் நின்னடி யாரில் திருநீறே
பூசப் பட்டேன் பூதல ராலுன் அடியானென்
றேசப் பட்டேன் இனிப்படு கின்ற தமையாதால்
ஆசைப் பட்டேன் ஆட்பட் டேனுன் அடியேனே. ௮௨

87 அடியேன்அல் லேன்கொல்லோ தானெனை ஆட்கொண் டிலை [கொல்லோ
அடியா ரானாரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்
செடிசேர் உடல மிதுநீக்க மாட்டேன் எங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண்ணாரக் காணுமாறு காணேனே. ௮௩

88 காணு மாறு காணேன் உன்னை அந்நாட் கண்டேனும்
பாணே பேசி என்தன்னைப் படுத்த தென்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே ஆரமுதே அத்தா செத்தே போயினேன்
ஏணு ணில்லா நாயினேன் என்கொண் டெழுகேன் எம்மானே.

89 மானேர்நோக்கியுடையாள்பங்காமறையீ றறியாமறையோனே
தேனேஅமுதே சிந்தைக்கரியாய் சிறியேன்பிழைபொறுக்குங்
கோனே சிறிதே கொடுமை பறைந்தேன் சிவமா நகர்குறுகப்
போனாரடியார் யானும் பொய்யும் புறமே போந்தோமே. ௮௫

90 புறமே போந்தோம் பொய்யும் யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சேர்ந்த அடியார் மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்து சிவனே நின்தாள் சேர்ந்தாரே.

91 தாராய் உடையாய் அடியேற் குன்தா ளிணையன்பு
பேரா வுலகம் புக்கா ரடியார் புறமே போந்தேன்யான்
ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்திங் குன்தா ளிணையன்புக்
காராய் அடியேன் அயலே மயல்கொண் டழுகேனே. ௮௭

92 அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய் அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு
தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னைப் பணிகேனே. ௮௮

93 பணிவார் பிணிதீர்த் தருளிப் பழைய அடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி அதுவும் அரிதென்றால்
திணியார் மூங்கி லனையேன் வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லை தாராய் பொய்தீர் மெய்யானே.

94 யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே. ௯௰

## 10. ஆனந்தாதீதம் (95–104)

95 மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொள் தாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினார்
ஈறி லாதநீ எளியை யாகிவந்
தொளிசெய் மானுட மாக நோக்கியுங்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே. ௯௧

96 மைஇ லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழுக்
கைஇ லங்குபொற் கிண்ண மென்றலால்
அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்
மெய்மை அன்பருன் மெய்மை மேவினார்
பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே. ௯௨

97 பொருத்த மின்மையேன் பொய்மை யுண்மையேன்
போத என்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந் தருளி இங்கெனை
இருத்தி னாய்முறை யோவெ னெம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. ௯௩

98 இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏலம் ஏலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்
எல்லை யில்லைநின் கருணை யெம்பிரான்
ஏது கொண்டுநான் ஏது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னும் உன்கழல்
காட்டி மீட்கவும் மறுவில் வானனே. ௯௪

99 வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நான்உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே. ௯௫

100 விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலிற்
பிச்ச னாக்கினாய் பெரிய அன்பருக்
குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
384 நச்சு மாமர மாயி னுங்கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே. ௯௬

101 உடைய நாதனே போற்றி நின்னலால்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னோபணி போற்றி உம்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினுங்
கடைய னாயினேன் போற்றி என்பெருங்
கருணை யாளனே போற்றி யென்னைநின்
388 அடிய னாக்கினாய் போற்றி ஆதியும்
அந்த மாயினாய் போற்றி யப்பனே. ௯௭

102 அப்ப னேயெனக் கமுத னேஆ
னந்த னேஅகம் நெகஅள் ளூறுதேன்
ஒப்ப னேஉனக் குரிய அன்பரில்
உரிய னாபுனைப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னேதுணை
யாள னேதொழும் பாள ரெய்ப்பினில்
392 வைப்ப னேயெனை வைப்ப தோசொலாய்
நைய வையகத் தெங்கள் மன்னனே. ௯௮

103 மன்ன எம்பிரான் வருக என்னெனை
மாலும் நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன எம்பிரான் வருக என்னெனை
முழுதும் யாவையும் இறுதி யுற்றநாள்
பின்ன எம்பிரான் வருக என்னெனைப்
பெய்க ழற்கண்அன் பாயென் நாவினாற்
396 பன்ன எம்பிரான் வருக என்னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே. ௯௯

104 பாட வேண்டும்நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டும்நான் போற்றி அம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டும்நான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டும்நான் போற்றி வீடுதந்
தருளு போற்றி நின்மெய்யர் மெய்யனே. ௧00

*திருச்சிற்றம்பலம்*

## 6. நீத்தல் விண்ணப்பம் (105-154)

*திருச்சிற்றம்பலம்*

105 கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்தோல்
உடையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே [ளே.
சடையவனேதளர்ந் தேன்எம்பி ரான்என்னைத் தாங்கிக்கொள்

106 கொள்ளேர் பிளவக லாத்தடங் கொங்கையர் கொவ்வைச்
செவ்வாய், விள்ளேன் எனினும் விடுதிகண் டாய்நின் விழுத்
தொழும்பின், உள்ளேன் புறமல்லேன் உத்தர கோசமங்
கைக்கரசே, கள்ளேன் ஒழியவுங் கண்டுகொண் டாண்டதெக்
காரணமே. உ

107 காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க என்னை வளர்ப்பவனே. ௩

108 வளர்கின்ற நின்கரு ணைக்கையில் வாங்கவும் நீங்கிஇப்பால்
மிளிர்கின்றஎன்னை விடுதிகண்டாய்வெண்மதிக்கொழுந்தொன்
றொளிர்கின்ற நீள்முடி உத்தர கோசமங் கைக்கரசே [சுடரே.
தெளிகின்ற பொன்னுமின் னும்அன்ன தோற்றச் செழுஞ்

109 செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற்பன்னாள்
விழுகின்ற என்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகால்

உழுகின்ற பூமுடி உத்தர கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னருள் ஆரமுது ஊட்ட மறுத்தனனே. ரு

110 மறுத்தனன் யானுன் அருளறி யாமையில் என்மணியே
வெறுத்தெனை நீவிட் டிடுதிகண் டாய்வினை யின்தொகுதி
ஒறுத்தெனை ஆண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே
பொறுப்ப ரன்றேபெரி யோர்சிறு நாய்கள்தம் பொய்யினையே.

111 பொய்யவ னேனைப் பொருளென ஆண்டொன்று பொத்திக்கொ
மெய்யவனே விட்டிடுதி கண்டாய் விடமுண் மிடற்று [ண்ட
மையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி யேன்பவந் தீர்ப்பவனே. எ

112 தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரருள் என்கொலென்று
வேர்க்கின்ற என்னை விடுதிகண் டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை உத்தர கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற அஞ்சொடச் சம்வினை யேனை இருதலையே. அ

113 இருதலைக் கொள்ளியின் உள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வலன் ஏந்திப் பொலிபவனே. கூ

114 பொலிகின்ற நின்தாள் புகுதப்பெற் றாக்கையைப் போக்கப்
மெலிகின்ற என்னை விடுதிகண் டாய்அளி தேர்விளரி [பெற்று
ஒலிநின்ற பூம்பொழில் உத்தர கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித் தாய்புரம் மாறுபட்டே. க0

115 மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன்மனத்தே
ஊறும்மட் டேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந்தகையே.

116 நெடுந்தகை நீயென்னை ஆட்கொள்ள யான்ஐம்புலன் கள்கொ
விடுந்தகை யேனை விடுதிகண் டாய்விர வார்வெருவ [ண்டு
அடுந்தகை வேல்வல்ல உத்தர கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேன்உண்ணுந் தெண்ணீர் அமுதப்பெருங்கடலே.

117 கடலினுள் நாய்நக்கி யாங்குன் கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை விடுதிகண் டாய்விட லில்லடியார்
உடலில மேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
மடலின்மட் டேமணி யேஅமு தேயென் மதுவெள்ளமே.

118 வெள்ளத்துள் நாவற் றியாங்குன் அருள்பெற்றுத் துன்பத்தின்
விள்ளக்கி லேனை விடுதிகண் டாய்விரும் பும்அடியார் [றும்
உள்ளத்துள் ளாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கரு ளாய்களி யாத களியெனக்கே. கசு

119 களிவந்த சிந்தையொ டுன்கழல் கண்டுங் கலந்தருள
வெளிவந்தி லேனை விடுதிகண் டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்
ஒளிவந்த பூங்கழல் உத்தர கோசமங் கைக்கரசே
எளிவந்த எந்தைபிரான் என்னை ஆளுடை என்னப்பனே.

120 என்னைஅப் பாஅஞ்சல் என்பவர் இன்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண் டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
அன்னையொப்பாய்எனக்கத்தனொப்பாய்என் அரும்பொருளே.

121 பொருளே தமியேன் புகலிட மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண்டாய் மெய்ம்மையார் விழுங்கும்
அருளே அணிபொழில் உத்தர கோசமங் கைக்கரசே
இருளே வெளியே இகபர மாகி இருந்தவனே. கஎ

122 இருந்தென்னை ஆண்டுகொள்விற்றுக்கொள்ஒற்றிவையென்னினல்
விருந்தின னேனை விடுதிகண் டாய்மிக்க நஞ்சமுதா [லால்
அருந்தின னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப் பட்டு மடங்கினர்க்கே. கஅ

123 மடங்களன்வல்வினைக்காட்டைநின்மன்னருள் தீக்கொளுவும்
விடங்களன் தன்னை விடுதிகண் டாய்என் பிறவியைவே
ரொடுங்களைந் தாண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுரித்தஞ்சுவித்தாய்வஞ்சிக்கொம்பினையே.

124 கொம்பரில் லாக்கொடி போல்அல மந்தனன் கோமளமே
வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர் நண்ணுகில்லா
உம்பருள் ளாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
அம்பர மேநில னேஅனல் காலொடப் பானவனே. உ௦

125 ஆனைவெம் போரிற் குறுந்தூ றெனப்புல னால்அலைப்புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண் டாய்வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை யும்அமு தத்தையும்ஒத்
தூனையும் என்பினை யும்உருக் காநின்ற ஒண்மையனே. உக

126 ஒண்மைய னேதிரு நீற்றையுத் தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண் டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென்றுஞ் சேயாய் பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மையனே தொன்மை ஆண்மையனே அலிப்பெற்றியனே.

127 பெற்றது கொண்டுபிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்தன்னைத் தாங்குநர் இல்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின் றேனெனக் குள்ளவனே. உ௩

128 உள்ளன வேநிற்க இல்லன செய்புமை யற்றுழனி
வெள்ளன லேனை விடுதிகண் டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய் புலனின்கட் போதலொட்டா
மெள்ளனவே மொய்க்கும் நெய்க்குடந் தன்னை எறும்பெனவே.

129 எறும்பிடை நாங்கூ ழெனப்புல னாலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர் வுற்றவர் உம்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே. உ௫

130 பெருநீ ரறச்சிறு மீன்துவண் டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண் டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின் வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை வானக் கொழுமணியே. உ௬

131 கொழுமணியேர்நகை யார்கொங்கைக் குன்றிடைச் சென்றுகுன்றி
விழுமடி யேனை விடுதிகண் டாய்மெய்ம் முழுதுங்கம்பித்
தழுமடி யாரிடை யார்த்துவைத் தாட்கொண் டருளியென்னைக்
கழுமணி யேயின்னுங் காட்டுகண் டாய்நின் புலன்கழலே. உ௭

132 புலன்கள் திகைப்பிக்க யானுந்திகைத்திங் கொர்பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனைவிடுதிகண் டாய்விண்ணும் மண்ணுமெல்லாங்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய் தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை யாயென் தொழுகுலமே.

133 குலங்களைந்தாய் களைந்தாயென்னைக் குற்றங்கொற் றச்சிலையாய்
விலங்கலெந்தாய் விட்டிடுதிகண்டாய்பொன்னின் மின்னுகொன்றை
அலங்கலந் தாமரை மேனியப் பாவொப் பிலாதவனே
மலங்களைந் தாற்சுழல் வன்தயி ரிற்பொரு மத்துறவே. ௨௯

134 மத்துறு தண்தயி ரிற்புலன் தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட ளுரச்செஞ் சாந்தணி சச்சையனே. ௩௰

135 சச்சைய னேமிக்க தண்புனல் விண்கால் நிலம்நெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண் டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய னேயொண் படஅரவக்
கச்சைய னேகடந் தாய்தடந் தாள அடற்கரியே. ௩௧

136 அடற்கரி போல்ஐம் புலன்களுக் கஞ்சி அழிந்தஎன்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண் டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு தாக்குங் கறைக்கண்டனே. ௩௨

137 கண்டது செய்து கருணைமட் டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண் டாய்நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போற் பணித்துப் பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெனெந் தாய்களை யாய்களை யாய குதுகுதுப்பே. ௩௩

138 குதுகுதுப் பின்றிநின் றென்குறிப் பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப் பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே. ௩௪

139 பரம்பர னேநின் பழஅடி யாரொடும் என்படிறு
விரும்பர னேவிட் டிடுதிகண் டாய்மென் முயற்கறையின்
அரும்பர நேர்வைத் தணிந்தாய் பிறவி ஐவாயரவம் [வே.
பொரும்பெரு மான்வினை யேன்மனம் அஞ்சிப் பொதும்புற

140 பொதும்புறு தீப்போற் புகைந்தெரி யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண் டாய்விரை யார்நறவந்
ததும்புமந் தாரத்தில் தாரம் பயின்றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தேன் அவிர்சடை வானத் தடலரைசே.

141 அரைசே அறியாச் சிறியேன் பிழைக்கஞ்சலென்னின் அல்லால்
விரைசேர் முடியாய் விடுதிகண் டாய்வெண் நகைக்கருங்கண்
திரைசேர் மடந்தை மணந்த திருப்பொற் பதப்புயங்கா
வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை தான்வந் தடர்வனவே.

142 அடர்புல னால்நிற் பிரிந்தஞ்சி அஞ்சொல்நல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண் டாய்விரிந் தேயெரியுஞ்
சுடரனை யாய்சுடு காட்டர சேதொழும் பர்க்கமுதே
தொடர்வரி யாய்தமி யேன்தனி நீக்குந் தனித்துணையே.

143 தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணையே என்தன்வாழ் முதலேஎனக் கெய்ப்பில் வைப்பே
தினைத்துணையேனும் பொறேன்துய ராக்கையின் திண்வலையே.

144 வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியின் ஒற்றைக்
கலைத்தலை யாய்கரு ணாகர னேகயி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாள்மண வாளஎன் வாழ்முதலே. ௪௦

145 முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந் நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண் டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்சிவ னேமுறை யோமுறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங் காஎன் சிவகதியே. ௪௧

146 கதியடி யேற்குன் கழல்தந் தருளவும் ஊன்கழியா
விதியடி யேனை விடுதிகண் டாய்வெண் தலைமுழையிற்
பதியுடை வாளரப் பார்த்திறை பைத்துச் சுருங்கஅஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக் குஞ்சடை மன்னவனே. ௪௨

147 மன்னவ னேயொன்று மாறறி யாச்சிறி யேன்மகிழ்ச்சி
மின்னவ னேவிட் டிடுதிகண் டாய்மிக்க வேதமெய்ந்நூல்
சொன்னவ னேசொற் கழிந்தவ னேகழி யாத்தொழும்பர்
முன்னவ னேபின்னும் ஆனவ னேயிம் முழுதையுமே. ௪௩

148 முழுதயில் வேற்கண் ணியரென்னும் மூரித் தழல்முழுகும்
விழுதனை யேனை விடுதிகண் டாய்நின் வெறிமலர்த்தாள் [ரான்
தொழுது செல்வான்நற் றொழும்பரிற் கூட்டிடு சோத்தெம்பி
பழுதுசெய் வேனை விடேலுடை யாய்உன்னைப் பாடுவனே.

149 பாடிற்றி லேன்பணி யேன்மணி நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண் டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றி லேன்சிவ னெவ்விடத் தானெவர் கண்டனரென்
றோடிற்றி லேன்கிடந் துள்ளுரு கேன்நின் றுழைத்தனனே.

150 உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத் தீயினொப்பாய்
விழைதரு வேனை விடுதிகண் டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபர னென்றென் றறைவன் பழிப்பினையே.

151 பழிப்பில்நின் பாதப் பழந்தொழும் பெய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண் டாய்வெண் மணிப்பணிலங்
கொழித்துமந் தாரமந் தாகினி நுந்தும்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே. சஎ

152 தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரஎன் தன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென்னின் உத்தர கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே. சஅ

153 சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையும் ஈசற்கென்று
விரிப்பிப்ப னென்னை விடுதிகண் டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் தோலுடைப்பிச்சன் நஞ்சூண்பிச்சன் ஊர்ச்சுடுகாட்
டெரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப்பிச்சனென் றேசுவனே.

154 ஏசினும் யானுன்னை யேத்தினும் என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பின்
தேசுடை யாயென்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலமுண் டாயமு துண்ணக் கடையவனே. ரு0

திருச்சிற்றம்பலம்

## 7. திருவெம்பாவை (155-174)

திருச்சிற்றம்பலம்

155 ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்

வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
4 ஏதேனும் ஆகாள் கிடந்தா ளென்னேயென்னே
ஈதே யெந்தோழி பரிசேலோ ரெம்பாவாய். ௧

156 பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போதிப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசி யிவையுஞ் சிலவோ விளையாடி
ஏசு மிடமீதோ விண்ணோர்க ளேத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
8 தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோ ரெம்பாவாய். ௨

157 முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
12 சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோ ரெம்பாவாய். ௩

158 ஒள்நித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவுங்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
16 உள்நெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையில் துயிலேலோ ரெம்பாவாய். ௪

159 மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்

கோலமும் நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
20 றோலம் இடினும் உணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய். ரு

160 மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவன் என்றலும் நாணாமே
போன திசைபகரா யின்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
24 ஊனே உருகா யுனக்கே உறும்எமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய். சு

161 அன்னே யிவையுஞ் சிலவோ பலஅமரர்
உன்னற் கரியான் ஒருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னாஎன் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்
என்னானை யென்னரையன் இன்னமுதென் றெல்லோமுஞ்
சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந் துயிலுதியோ
28 வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய். எ

162 கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்குங்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
32 ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். அ

163 முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்

அன்னவரே எங்கணவ ராவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய். ௯

164 பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்
ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய். ௧௦

165 மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போற்
செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பாய் எமையேலோ ரெம்பாவாய். ௧௧

166 ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்
தீர்த்தன்நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்
கூத்தனிவ் வானுங் குவலயமும் எல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். ௧௨

167 பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த

பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
52 கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். கங

168 காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
56 பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோ ரெம்பாவாய். கச

169 ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணி
பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும் [யாள்
ஆரொருவ ரிவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
60 வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். கரு

170 முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையா ளிட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
64 முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய். கசு

171 செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கோங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்

சேங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
68 நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். கஎ

172 அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
72 கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோரெம்பாவாய்.

173 உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
76 இங்கிப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய். க௯

174 போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
80 போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். உ0

திருச்சிற்றம்பலம்

# 8. திருவம்மானை (175-194)

திருச்சிற்றம்பலம்

175 செங்கண் நெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்.

176 பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய
பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழியருளி வந்தேன் உளம்புகுந்த
ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய்.

177 இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்
பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.

178 வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனுங்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்
டூன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்.

179 கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம்மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய்.

180 கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாள்தா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த
ஆள்தான்கொண் டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய். ௬

181 ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்
தாயான தத்துவனைத் தானே உலகேழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய். ௭

182 பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய். ௮

183 துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோலமா ஊர்தியான்
கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்
அண்டமுத லாயினான் அந்தமிலா ஆனந்தம்
பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்
அண்டம் வியப்புறுமா பாடுதுங்காண் அம்மானாய். ௯

184 விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய். ௧௦

185 செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினான்
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த

அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக வொப்புவித்த உள்ளத்தா ருள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய். கக

186 மைப்பொலியுங் கண்ணிகேள் மாலயனோ டிந்திரனும்
எப்பிறவி யுந்தேட என்னையுந்தன் இன்னருளால்
இப்பிறவி ஆட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட்கண் தோற்றமாய் மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்குந் தானேயாய் யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாம் நஞ்சிவனைப் பாடுதுங்காண் அம்மானாய். கஉ

187 கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை எங்குஞ் செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானை அல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய். கங

188 ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை
ஊனையும் நின்றுருக்கி என்வினையை ஓட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையும் ஒத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்தொழும்பிற் கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். கச

189 சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட் டெச்சன் தலையரிந்
தந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய். கரு

190 ஊனாய் உயிராய் உணர்வாய்என் னுட்கலந்து
தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்குங்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய். கசு

191 சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
102 ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய். கஎ

192 கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனுங் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ
108 அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய். கஅ

193 முன்னானை மூவர்க்கு முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை என்னப்பன் என்பார்கட் கின்னமுதை
114 அன்னானை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய். ககூ

194 பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
120 பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய். உ0

திருச்சிற்றம்பலம்

# 9. திருப்பொற்சுண்ணம் (195 - 214)

திருச்சிற்றம்பலம்

195 முத்துநல் தாமம்பூ மாலைதூக்கி
முளைக்குடந் தூபம்நல் தீபம்வைம்மின்
சத்தியும் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டிசைமின்

சித்தியுங் கௌரியும் பார்ப்பதியுங்
கங்கையும் வந்து கவரிகொண்மின்
அத்தன் ஐயாறன் அம்மானைப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

196 பூவியல் வார்சடை எம்பிராற்குப்
பொற்றிருச் சுண்ணம் இடிக்கவேண்டும்
மாவின் வடுவகி ரன்னகண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறநிலாமே
குனிமின் தொழுமினெங் கோனெங்கூத்தன்
தேவியுந் தானும்வந் தெம்மையாளச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே.

197 சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பக நாட்டியெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோன்அயன் தன்பெருமான்
ஆழியான் நாதன்நல் வேலன்தாதை
எந்தரம் ஆளுமை யாள்கொழுநற்
கேய்ந்த பொற்சுண்ணம் இடித்துநாமே.

198 காசணி மின்கள் உலக்கையெல்லாங்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
நின்று நிலாவுக என்றுவாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்துநின்று
பாடிப் பொற்சுண்ணம் இடித்துநாமே.

199 அறுகெடுப் பார்அய னும்அரியும்
அன்றிமற் றிந்திர னோடமரர்
நறுமுறு தேவர் கணங்களெல்லாம்
நம்மிற்பின் பல்ல தெடுக்கவொட்டோம்

செறிவுடை மும்மதில் எய்தவில்லி
திருவேகம்பன் செம்பொற் கோயில்பாடி
20 முறுவற்செவ் வாயினீர் முக்கணப்பற்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. ௫

200 உலக்கை பலஓச்சு வார்பெரியர்
உலகமெ லாம்உரல் போதாதென்றே
கலக்க அடியவர் வந்துநின்றார்
காண உலகங்கள் போதாதென்றே
நலக்க அடியோமை ஆண்டுகொண்டு
நாண்மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
24 மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்து பொற்சுண்ணம் இடித்துநாமே. ௬

201 சூடகந் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்பத்
தொண்டர் குழாமெழுந் தார்ப்ப ஆர்ப்ப
நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப
நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்பப்
பாடகம் மெல்லடி யார்க்குமங்கை
பங்கினன் எங்கள் பராபரனுக்
28 காடக மாமலை அன்னகோவுக்
காடப் பொற்சுண்ணம் இடித்துநாமே. ௭

202 வாள்தடங் கண்மட மங்கைநல்லீர்
வரிவளை ஆர்ப்பவண் கொங்கைபொங்கத்
தோள்திரு முண்டந் துதைந்திலங்கச்
சோத்தெம்பி ரானென்று சொல்லிச்சொல்லி
நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி
நாயிற் கடைப்பட்ட நம்மையிம்மை
32 ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி
ஆடப் பொற்சுண்ணம் இடித்துநாமே. ௮

203 வையகம் எல்லாம் உரலதாக
மாமேரு என்னும் உலக்கை நாட்டி
மெய்யெனும் மஞ்சள் நிறையஅட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்

செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
36 ஐயன் அணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

204 முத்தணி கொங்கைகள் ஆடஆட
மொய்குழல் வண்டினம் ஆடஆடச்
சித்தஞ் சிவனொடும் ஆடஆடச்
செங்கயற் கண்பனி ஆடஆடப்
பித்தெம் பிரானொடும் ஆடஆடப்
பிறவி பிறரொடும் ஆடஆட
40 அத்தன் கருணையொ டாடஆட
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

205 மாடு நகைவாள் நிலாவெறிப்ப
வாய்திறந் தம்பவ ளந்துடிப்பப்
பாடுமின் நந்தம்மை ஆண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
44 ஆடுமின் அம்பலத் தாடினானுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

206 மையமர் கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன்தன்னை
ஐயனை ஐயர்பி ரானைநம்மை
அகப்படுத் தாட்கொண் டருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதரிக் கண்ணிணைப் பொற்றொடித்தோள்
48 பையர வல்குல் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

207 மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்
வெண்நகைப் பண்ணமர் மென்மொழியீர்
என்னுடை ஆரமு தெங்களப்பன்
எம்பெரு மான்இம வான்மகட்குத்

தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்
தமையன்எம் ஐயன் தாள்கள்பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்
பொற்திருச் சுண்ணம் இடித்துநாமே. கங

208 சங்கம் அரற்றச் சிலம்பொலிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்
செங்கனி வாயித ழுந்துடிப்பச்
சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்
கங்கை இரைப்ப அராஇரைக்குங்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்
பொற்திருச் சுண்ணம் இடித்துநாமே. கச

209 ஞானக் கரும்பின் தெளியைப்பாகை
நாடற் கரிய நலத்தைநந்தாத்
தேனைப் பழச்சுவை ஆயினானைச்
சித்தம் புகுந்துதித் திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்
பானல் தடங்கண் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. கரு

210 ஆவகை நாமும்வந் தன்பர்தம்மோ
டாட்செயும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர் கனாவிலுங் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவகம் ஏந்திய வெல்கொடியான்
சிவபெரு மான்புரஞ் செற்றகொற்றச்
சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. கசு

211 தேனக மாமலர்க் கொன்றைபாடிச்
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்
வானக மாமதிப் பிள்ளைபாடி
மால்விடை பாடி வலக்கையேந்தும்

ஊனக மாமழுச் சூலம்பாடி
உம்பரும் இம்பரும் உய்யஅன்று
போனக மாகநஞ் சுண்டல்பாடிப்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. கஎ

212 அயன்தலை கொண்டுசெண் டாடல்பாடி
அருக்கன் எயிறு பறித்தல்பாடிக்
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல்பாடிக்
காலனைக் காலால் உதைத்தல்பாடி
இயைந்தன முப்புரம் எய்தல்பாடி
ஏழை அடியோமை ஆண்டுகொண்ட
நயந்தனைப் பாடிநின் றாடியாடி
நாதற்குச் சுண்ணம் இடித்துநாமே. கஅ

213 வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி
மத்தமும் பாடி மதியும்பாடிச்
சிட்டர்கள் வாழுந்தென் தில்லைபாடிச்
சிற்றம் பலத்தெங்கள் செல்வம்பாடிக்
கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்
இட்டுநின் றாடும் அரவம்பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்துநாமே. கசூ

214 வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாய்இருள் ஆயினார்க்குத்
துன்பமு மாய்இன்பம் ஆயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்
காதியும் அந்தமும் ஆயினாருக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. உ0

திருச்சிற்றம்பலம்

# 10. திருக்கோத்தும்பி (215 - 234)

திருச்சிற்றம்பலம்

215 பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. க

216 நானார்என் உள்ளமார் ஞானங்க ளாரென்னை யாரறிவார்
வானோர் பிரானென்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
ஊனா ருடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ. உ

217 தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறுங் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. ங

218 கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ. ச

219 அத்தேவர் தேவர் அவர்தேவ ரென்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. ரு

220 வைத்த நிதிபெண்டிர் மக்கள்குலங் கல்வியென்னும்
பித்த உலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. சு

221 சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரைநாம் உருவறியோஞ்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ. எ

222 ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. அ

223 கரணங்கள் எல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. கூ

224 நோயுற்று மூத்துநான் நுந்துகன்றா யிங்கிருந்து
நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாந்
தாயுற்று வந்தென்னை ஆண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. க0

225 வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கல்நெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட
அன்னந் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. கக

226 நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேதும் இல்லாதென் செய்பணிகள் கொண்டருளுந்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ. க௨

227 நான்தனக் கன்பின்மை நானுந்தா னும்அறிவோம்
தானென்னை ஆட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆன கருணையும் அங்குற்றே தானவனே
கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. க௩

228 கருவாய் உலகினுக் கப்புறமாய் இப்புறத்தே
மருவார் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ. க௪

229 நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோன் ஆண்டிலனேல்
வானுந் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. க௫

230 உள்ளப் படாத திருவுருவை உள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரான்எம் பிரான்என்னை வேறேஆட்
64 கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. கசு

231 பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள்தோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட
ஐயாவென் ஆருயிரே அம்பலவா என்றவன்றன்
68 செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. கஎ

232 தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தோக்க வளையு முடைத்தொன்மைக்
72 கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. கஅ

233 கள்வன் கடியன் கலதியிவன் என்னாதே
வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே
உள்ளத் துறுதுய ரொன்றொழியா வண்ணமெல்லாந்
76 தெள்ளுங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. ககூ

234 பூமேல் அயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேல் தவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த
80 தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. உ0

திருச்சிற்றம்பலம்

## 11. திருத்தெள்ளேணம் (235 - 254)

திருச்சிற்றம்பலம்

235 திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம் அறியவோர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்
ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
4 திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. க

236 திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேர் அறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை
அருவாய் உருவமும் ஆயபிரான் அவன்மருவுந்
8 திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. உ

237 அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்குந்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பதுகேட் டுலகமெல்லாஞ்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௩

238 அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயங் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௪

239 அருமந்த தேவர் அயன்திருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் உளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௫

240 அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்
உரையாட உள்ளொளியாட ஒண்மாமலர்க் கண்களில்நீர்த்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௬

241 ஆவா அரிஅயன்இந் திரன்வானோர்க் கரியசிவன்
வாவாவென் றென்னையும்பூதலத்தே வலித்தாண்டு கொண்டான்
பூவார் அடிச்சுவ டென்தலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௭

242 கறங்கோலை போல்வதோர் காயப்பிறப்போ டிறப்பென்னும்
அறம்பாவமென்றிரண்டச் சந்தவிர்த்தென்னை ஆண்டுகொண்டான்
மறந்தேயுந் தன்கழல்நான் மறவாவண்ணம் நல்கியஅத்
திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. ௮

243 கல்நா ருரித்தென்ன என்னையுந்தன் கருணையினாற்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி
மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்
தென்னா தென்னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. ௯

244 கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
புனவேய னவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே எனைப்பிடித் தாட் கொண்டவா நயந்துநெஞ்சஞ்
சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௦

245 கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக்கலந் தாண்டலுமே
அயல்மாண் டருவினைச் சுற்றமுமாண் டவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய
செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௧

246 முத்திக் குழன்று முனிவர்குழாம் நனிவாட
அத்திக் கருளி அடியேனை ஆண்டுகொண்டு
பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி
தித்திக்கு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௨

247 பார்பாடும் பாதாளர் பாடும்விண் ணோர் தம்பாடும்
ஆர்பாடுஞ் சாரா வகையருளி ஆண்டுகொண்ட
நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௩

248 மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தாற்
சேலேர்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௪

249 உருகிப் பெருகி உளங்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௫

250 புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ. ௧௬

251 உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாஞ்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங்
கவலைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளுஞ்
செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௭

252 வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல்நீர் மண்கெடினுந்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௧௮

253 விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து
மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோங்
கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்
தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ.

254 குலம்பாடிக் கொக்கிறகும் பாடிக் கோல்வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாள்தோறும்
அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. ௨௦

திருச்சிற்றம்பலம்

## 12. திருச்சாழல் (255 - 274)

திருச்சிற்றம்பலம்

255 பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதுந் திருவாயால் மறைபோலுங் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ. க

256 என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ. உ

257 கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினுங்
காயில் உலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ. ௩

258 அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ. ௪

259 தக்கனையும் எச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதான் என்னேடீ
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி அருள்கொடுத்தங்
கெச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன்காண் சாழலோ. ௫

260 அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றதுதான் என்னேடீ
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தால் ஆங்காரந் தவிரார்காண் சாழலோ. ௬

261 மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்சடையிற் பாயுமது என்னேடீ
சலமுகத்தால் அவன்சடையிற் பாய்ந்திலளேல் தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ. ௭

262 கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலாலம் உண்டான் அவன்சதுர்தான் என்னேடீ
ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. ௮

263 தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. ௯

264 தானந்தம் இல்லான் தனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ. ௧௦

265 நங்காய் இதென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ. ௧௧

266 கானார் புலித்தோல் உடைதலைஊண் காடுபதி
ஆனா லவனுக்கிங் காட்படுவார் ஆரேடீ
ஆனாலுங் கேளாய் அயனுந் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ. ௧௨

267 மலையரையன் பொற்பாவை வாள்நுதலாள் பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்துங்
கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங்காண் சாழலோ.

513 கோற்றேன்எனக் கென்கோகுரை கடல்வாய்அமு தென்கோ
ஆற்றேன்எங்கள் அரனேஅரு மருந்தேஎன தரசே
சேற்றார்வயல் புடைசூழ்தரு திருப்பெருந்துறை உறையும்
நீற்றார்தரு திருமேனிநின் மலனேஉனை யானே. ௮

514 எச்சம்அறி வேன்நான்எனக் கிருக்கின்றதை அறியேன்
அச்சோஎங்கள் அரனேஅரு மருந்தேஎன தமுதே
செச்சைமலர் புரைமேனியன் திருப்பெருந்துறை உறைவான்
நிச்சம்என நெஞ்சில்மன்னி யானாகிநின் றானே. ௯

515 வான்பாவிய உலகத்தவர் தவமேசெய அவமே
ஊன்பாவிய உடலைச்சுமந் தடவிமர மானேன் [உறைவாய்
தேன்பாய்மலர்க் கொன்றைமன்னு திருப்பெருந்துறை
நான்பாவியன் ஆனால்உனை நல்காயென லாமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 35. அச்சப்பத்து (516 - 525)

திருச்சிற்றம்பலம்

516 புற்றில்வாள் அரவும் அஞ்சேன் பொய்யர்தம் மெய்யும்
அஞ்சேன், கற்றைவார் சடைஎம் அண்ணல் கண்ணுதல்
பாதம் நண்ணி, மற்றும்ஓர் தெய்வந் தன்னை உண்டென
நினைந்தெம் பெம்மாற், கற்றிலா தவரைக் கண்டால் அம்ம
நாம் அஞ்சு மாறே. ௧

517 வெருவரேன் வேட்கைவந்தால் வினைக்கடல் கொளினும்
இருவரால் மாறு காணா எம்பிரான் தம்பி ரானாந் [அஞ்சேன்
திருவுரு அன்றி மற்றோர் தேவரெத் தேவரென்ன
அருவரா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே. ௨

518 வன்புலால் வேலும் அஞ்சேன் வளைக்கையார் கடைக்கண்
என்பெலாம் உருக நோக்கி அம்பலத் தாடு கின்ற [அஞ்சேன்
என்பொலா மணியை ஏத்தி இனிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௩

519 கிளியனார் கிளவி அஞ்சேன் அவர்கிறி முறுவல் அஞ்சேன்
வெளியநீ றாடும் மேனி வேதியன் பாதம் நண்ணித்
துளியுலாம் கண்ண ராகித் தொழுதழு துள்ளம் நெக்கிங்
களியிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௪

520 பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியினான்தன் தொழும்ப ரோடழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீ
றணிகிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௫

521 வாளுலாம்எரியும் அஞ்சேன் வரைபுரண் டிடினும் அஞ்சேன்
தோளுலா நீற்றன் ஏற்றன் சொற்பதம் கடந்த அப்பன்
தாளதா மரைக ளேத்தித் தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௬

522 தகைவிலாப் பழியும் அஞ்சேன் சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந் தெரிகை வீசிப் பொலிந்தஅம் பலத்து ளாடும்
முகைநகைக் கொன்றை மாலை முன்னவன் பாத மேத்தி
அகம்நெகா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே. ௭

523 தறிசெறி களிறும் அஞ்சேன் தழல்விழி உழுவை அஞ்சேன்
வெறிகமழ் சடையன் அப்பன் விண்ணவர் நண்ணமாட்டாச்
செறிதரு கழல்க ளேத்திச் சிறந்தினி திருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௮

524 மஞ்சுலாம் உருமும் அஞ்சேன் மன்னரோ டுறவும் அஞ்சேன்
நஞ்சமே அமுத மாக்கும் நம்பிரான் எம்பி ரானாய்ச் [டா
செஞ்செவே ஆண்டு கொண்டான் திருமுண்டம் தீட்டமாட்
தஞ்சவா ரவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௯

525 கோணிலா வாளி அஞ்சேன் கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீணிலா அணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. ௧௦

திருச்சிற்றம்பலம்

# 36. திருப்பாண்டிப் பதிகம் (526 - 535)

திருச்சிற்றம்பலம்

526 பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்
ஒருவரை ஒன்று மிலாதவரைக் கழற்போ திறைஞ்சித்
தெரிவர நின்றுருக் கிப்பரி மேற்கொண்ட சேவகனார்
4 ஒருவரை யன்றி உருவறி யாதென்றன் உள்ளமதே. க

527 சதுரை மறந்தறி மால்கொள்வர் சார்ந்தவர் சாற்றிச்சொன்னோ
கதிரை மறைத்தன்ன சோதி கழுக்கடை கைப்பிடித்துக் [ங்
குதிரையின் மேல்வந்து கூடிடு மேற்குடி கேடுகண்டீர்
8 மதுரையர் மன்னன் மறுபிறப் போட மறித்திடுமே. உ

528 நீரின்ப வெள்ளத்துள் நீந்திக் குளிக்கின்ற நெஞ்சங்
கொண்டீர், பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட
பாண்டியனார், ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு தொண்
12 டரை உள்ளங் கொண்டார், பேரின்ப வெள்ளத்துட் பெய்
கழ லேசென்று பேணுமினே. ங

529 செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் தென்னன்நன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக் காலம்எக் காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வாள் உறைகழித் தானந்த மாக்கடவி
16 எறியும் பிறப்பை எதிர்ந்தார் புரள இருநிலத்தே ச

530 காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டான்எங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு
20 மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே. ரு

531 ஈண்டிய மாயா இருள்கெட எப்பொரு ளும்விளங்கத்
தூண்டிய சோதியை மீனவ னுஞ்சொல்ல வல்லன்அல்லன்
வேண்டிய போதே விலக்கிலை வாய்தல் விரும்புமின்தாள்
24 பாண்டிய னாரருள் செய்கின்ற முத்திப் பரிசிதுவே. சு

532 மாயவ னப்பரி மேல்கொண்டு மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும் பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத் தன்னரு ளேஅருளுஞ்
28 சேய நெடுங்கொடைத் தென்னவன் சேவடி சேர்மின்களே. எ

533 அழிவின்றி நின்றதொர் ஆனந்த வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக் கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன் பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை யேசென்று முந்துமினே.

534 விரவிய தீவினை மேலைப் பிறப்புமுந் நீர்கடக்கப்
பரவிய அன்பரை என்புருக் கும்பரம் பாண்டியனார்
புரவியின் மேல்வரப் புந்திகொ ளப்பட்ட பூங்கொடியார்
மரவியன் மேல்கொண்டு தம்மையுந் தாம்அறி யார்மறந்தே.

535 கூற்றைவென் றாங்கைவர் கோக்களை யும்வென் றிருந்தழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியுந் தானும்ஓர் மீனவன்பால்
ஏற்றுவந் தாருயி ருண்ட திறலொற்றைச் சேவகனே
தேற்றமி லாதவர் சேவடி சிக்கெனச் சேர்மின்களே. க0

திருச்சிற்றம்பலம்

## 37. பிடித்தபத்து (536 - 545)

திருச்சிற்றம்பலம்

536 உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தேன் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. க

537 விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடையமெய்ப் பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணம் காத்தெனை ஆண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. உ

538 அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௩

539 அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௪

540 ஒப்புனக் கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோ ரன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௫

541 அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்த மருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியஎம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௬

542 பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை உகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
28 ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

543 அத்தனே அண்டர் அண்டமாய் நின்ற
ஆதியே யாதும் ஈறில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை அல்லையாய் நிற்கும்
32 எத்தனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

544 பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
36 யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

545 புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
40 இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

திருச்சிற்றம்பலம்

# 38. திருவேசறவு (546 - 555)

திருச்சிற்றம்பலம்

546 இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென் என்புருக்கிக்
கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினைஉன் கழலிணைகள்
ஒருங்குதிரை உலவுசடை உடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவா றன்றேஉன் பேரருளே. க

547 பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்
குண்ணார்ந்த ஆரமுதே உடையானே அடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாஎன்னக்
கண்ணார உய்ந்தவா றன்றேஉன் கழல்கண்டே. உ

548 ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னும் அருநரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற் காவாவென்
றோத(ம்)மலி நஞ்சுண்ட உடையானே அடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேஎம் பரம்பரனே. ங

549 பச்சைத்தாள் அரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே அடியேனை உய்யக்கொண்
டெச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோஎன்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேஉன் திறம்நினைந்தே. ச

550 கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேன்எம் பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. ரு

551 பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின்னருளால்
உய்ஞ்சேன்எம் பெருமானே உடையானே அடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேஅம் பலத்தமுதே. சு

552 என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் அரியவொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பால்நீ அகம்நெகவே புகுந்தருளி ஆட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேஎம் பெருமானே. எ

553 மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஒத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையுமாய்ப்
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தேநீ ஆண்டவா றன்றேஎம் பெருமானே. அ

554 மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறும் மிகஅலறிச் சிவபெருமா னென்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே இடங்கொண்ட அம்மானே.

555 நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே. ௰

திருச்சிற்றம்பலம்

## 39. திருப்புலம்பல் (556 - 558)

திருச்சிற்றம்பலம்

556 பூங்கமலத் தயனொடுமால் அறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் ணீறாடி
ஓங்கெயில்சூழ் திருவாரூர் உடையானே அடியேனின்
பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே. க

557 சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதி பசுபதீ மழவெள்ளை [நான்
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியேன்
உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே. உ

558 உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டே
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையுங் [ன்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. ௩

திருச்சிற்றம்பலம்

# 40. குலாப்பத்து (559 - 568)

திருச்சிற்றம்பலம்

559 ஓடுங் கவந்தியுமே உறவென் றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே எனத்தெளிந்து
கூடும் உயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. க

560 துடியேர் இடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. உ

561 என்புள் ளுருக்கி இருவினையை ஈடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய உள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. ௩

562 குறியும் நெறியுங் குணமுமிலார் குழாங்கள்தமைப்
பிறியும் மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்
செறியுங் கருத்தில் உருத்தமுதாஞ் சிவபதத்தை
அறியுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. ௪

563 பேருங் குணமும் பிணிப்புறும்இப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாஞ்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. ௫

564 கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ணம் நானணுகும்
அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. ௬

565 மதிக்குந் திறலுடைய வல்அரக்கன் தோள்நெரிய
மிதிக்குந் திருவடி என்தலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்
கதிர்க்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. ௭

566 இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே
நடக்குந் திருவடி என்தலைமேல் நட்டமையாற்
கடக்குந் திறல்ஐவர் கண்டகர்தம் வல்லாட்டை
அடக்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. அ

567 பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்
கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்
தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்தலையால்
ஆட்செய் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. கூ

568 கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்
கிம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. க0

திருச்சிற்றம்பலம்

## 41. அற்புதப்பத்து (569 - 578)

திருச்சிற்றம்பலம்

569 மைய லாய்இந்த மண்ணிடை வாழ்வெனும் ஆழியு ளகப்
பட்டுத், தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான் தலைதடு
மாறுமே, பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன் பொன்
னடி யிணைகாட்டி, மெய்ய னுய்வெளி காட்டிமுன் நின்றதோர்
அற்புதம் விளம்பேனே. க

570 ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோர் இயல்பொடும் வணங்
காதே, சாந்த மார்முலைத் தையல்நல் லாரொடுந் தலைதடு மாறு
கிப், போந்து யான்துயர் புகாவணம் அருள்செய்து பொற்
கழ லிணைகாட்டி, வேந்த னுய்வெளி யேஎன்முன் நின்ற
தோர் அற்புதம் விளம்பேனே. உ

571 நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து நானென
தெனும்மாயக், கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக் கழ
றியே திரிவேனைப், பிடித்து முன்னின்றப் பெருமறை
தேடிய அரும்பொருள் அடியேனை, அடித்த டித்துஅக் கார
முன் தீற்றிய அற்புதம் அறியேனே. ங

572 பொருந்தும் இப்பிறப் பிறப்பிவை நினையாது பொய்
களே புகன்றுபோய்க், கருங்கு ழலினார் கண்களால் ஏறுண்டு
கலங்கியே கிடப்பேனைத், திருந்து சேவடிச் சிலம்பவை
சிலம்பிடத் திருவொடும் அகலாதே, அருந்து ணைவனாய்
ஆண்டுகொண் டருளிய அற்புதம் அறியேனே. ௪

573 மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும் மங்கையர் தம்மோடுங்
கூடி அங்குள குணங்களால் ஏறுண்டு குலாவியே திரிவேனை
வீடுதந் தென்றன் வெந்தொழில் வீட்டிட மென்மலர்க்கழல்காட்டி
ஆடு வித்தென தகம்புகுந்தாண்டதோர் அற்புதம் அறியேனே.

574 வணங்கும் இப்பிறப் பிறப்பிவை நினையாது மங்கையர்
தம்மோடும், பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்தி
நான் பித்தனாய்த் திரிவேனைக், குணங்க ளுங்குறி களுமிலாக்
குணக்கடல் கோமளத் தொடுங்கூடி, அணைந்து வந்தெனை
ஆண்டுகொண் டருளிய அற்புதம் அறியேனே. சு

575 இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான் இயல்பொ
டஞ் செழுத்தோதித், தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாது
நான் தடமுலை யார்தங்கள், மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு
கிடப்பேனை மலரடி யிணைகாட்டி, அப்பன் என்னைவந்
தாண்டுகொண் டருளிய அற்புதம் அறியேனே. எ

576 ஊச லாட்டுமிவ் வுடலுயிராயின இருவினை அறுத்தென்னை [ப்
ஓசையா லுணர்வார்க் குணர்வரியவன்உணர்வுதந்தொளியாக்கி
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன் பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய அற்புதம் அறியேனே. அ

577 பொச்சை யானஇப் பிறவியிற் கிடந்துநான் புழுத்தலை
நாய்போல, இச்சை யாயின ஏழையர்க் கேசெய்தங் கிணங்
கியே திரிவேனை, இச்ச கத்தரி அயனுமெட் டாததன் விரை
மலர்க் கழல்காட்டி, அச்சன் என்னையும் ஆண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே. கூ

578 செறியும் இப்பிறப் பிறப்பிவை நினையாது செறிகுழ
லார்செய்யுங், கிறியுங் கீழ்மையுங் கெண்டையங் கண்களும்

உன்னியே கிடப்பேனை, இறைவன் எம்பிரான் எல்லையில்
லாததன் இணைமலர்க் கழல்காட்டி, அறிவு தந்தெனை ஆண்டு
கொண் டருளிய அற்புதம் அறியேனே. க௦

திருச்சிற்றம்பலம்

## 42. சென்னிப்பத்து (579-588)

திருச்சிற்றம்பலம்

579 தேவ தேவன்மெய்ச் சேவகன் தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொ ணாமுத லாய ஆனந்த மூர்த்தியான்
யாவ ராயினும் அன்பரன்றி அறியொ ணாமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவ டிக்கண்நம் சென்னி மன்னிச் சுடருமே.

580 அட்ட மூர்த்தி அழகன் இன்னமு தாய ஆனந்த வெள்
ளத்தான், சிட்டன் மெய்ச்சிவ லோக நாயகன் தென்பெ
ருந்துறைச் சேவகன், மட்டு வார்குழல் மங்கை யாளையோர்
பாகம் வைத்த அழகன்தன், வட்ட மாமலர்ச் சேவ டிக்கண்
நம் சென்னி மன்னி மலருமே. உ

581 நங்கை மீரெனை நோக்குமின் நங்கள் நாதன் நம்பணி
கொண்டவன், தெங்கு சோலைகள் சூழ்பெ ருந்துறை மேய
சேவகன் நாயகன், மங்கை மார்கையில் வளையுங் கொண்
டெம் உயிருங் கொண்டெம் பணிகொள்வான், பொங்கு
மாமலர்ச் சேவ டிக்கண்நம் சென்னி மன்னிப் பொலியுமே. ௩

582 பத்தர் சூழப் பராபரன் பாரில் வந்து பார்ப்பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான் தில்லை மூதூர் நடஞ்செய்வான் [வான்
எத்தனாகிவந்தில்புகுந்தெமைஆளுங்கொண்டெம்பணிகொள்
வைத்த மாமலர்ச் சேவடிக்கண்நம் சென்னி மன்னி மலருமே.

583 மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி மதித்திடா
வகை நல்கினான், வேய தோளுமை பங்கன் எங்கள் திருப்
பெருந்துறை மேவினான், காயத் துள்ளமு தூற ஊறநீ கண்டு
கொள்ளென்று காட்டிய, சேய மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே. ௫

584 சித்தமே புகுந்தெம்மையாட் கொண்டு தீவினைகெடுத்துய்யலாம்
பத்தி தந்துதன் பொற்க ழற்கணே பன்மலர் கொய்து சேர்த்தலும்
முத்தி தந்திந்தமூவுல குக்கும் அப்பு றத்தெமை வைத்திடும்
24 அத்தன் மாமலர்ச் சேவடிக்கண் நம்சென்னி மன்னிமலருமே.

585 பிறவி யென்னுமிக் கடலை நீந்தத்தன் பேரருள் தந்தருளி
னான், அறவை யென்றடி யார்கள் தங்க ளருட்கு ழாம்புக
விட்டுநல், உறவு செய்தெனை உய்யக்கொண்ட பிரான் தன்
28 உண்மைப் பெருக்கமாம், திறமை காட்டிய சேவடிக் கண்நம்
சென்னி மன்னித் திகழுமே. எ

586 புழுவி னாற்பொதிந் திடுகுரம்பையிற் பொய்தனை யொழி
வித்திடும், எழில்கொள் சோதியெம் ஈசன் எம்பிரான்
என்னுடை யப்பன் என்றென்று, தொழுத கையின ராகித்
32 தூய்மலர்க் கண்கள் நீர்மல்குந் தொண்டர்க்கு, வழுவிலா
மலர்ச் சேவ டிக்கண்நம் சென்னி மன்னி மலருமே. அ

587 வம்ப னாய்த்திரி வேனை வாவென்று வல்வி னைப்பகை
மாய்த்திடும், உம்ப ரான்உல கூடறுத்தப் புறத்த னாய்நின்ற
எம்பிரான், அன்ப ரானவர்க் கருளி மெய்யடி யார்கட் கின்
36 பந் தழைத்திடுஞ், செம்பொன் மாமலர்ச் சேவ டிக்கண்
நம்சென்னி மன்னித் திகழுமே. கூ

588 முத்த னைமுதற் சோதியை முக்கண் அப்பனை முதல்
வித்தினைச், சித்த னைச்சிவ லோக னைத்திரு நாமம் பாடித்
திரிதரும், பத்தர் காள்இங்கே வம்மின் நீர்உங்கள் பாசந்
40 தீரப் பணிமினோ, சித்த மார்தருஞ் சேவ டிக்கண் நம்
சென்னி மன்னித் திகழுமே. க0

திருச்சிற்றம்பலம்

## 43. திருவார்த்தை (589 - 598)

திருச்சிற்றம்பலம்

589 மாதிவர் பாகன் மறைபயின்ற வாசகன் மாமலர் மேய
சோதி, கோதில் பரங்கரு ணையடியார் குலாவு நீதிகுண மாக
நல்கும், போதலர் சோலைப் பெருந்துறையெம் புண்ணியன்
4 மண்ணிடை வந்திழிந், தாதிப் பிரமம் வெளிப்படுத்த அரு
ளறிவார் எம்பிரா னாவாரே. க

590 மாலயன் வானவர் கோனும்வந்து வணங்க அவர்க்கருள்
செய்தஈசன், ஞாலம் அதனிடை வந்திழிந்து நன்னெறி
காட்டி நலம்திகழுங், கோல மணியணி மாடநீடு குலாவு
மிடைவை மடநல்லாட்குச், சீல மிகக்கரு ணையளிக்குந் திற
மறிவார் எம்பிரா னாவாரே. உ

591 அணிமுடி ஆதி அமரர்கோமான் ஆனந்தக் கூத்தன்
அறுசமயம், பணிவகை செய்து படவதேறிப் பாரொடு
விண்ணும் பரவியேத்தப், பிணிகெட நல்கும் பெருந்துறை
யெம் பேரரு ளாளன்பெண் பாலுகந்து, மணிவலை கொண்டு
வான் மீன்விசிறும் வகையறிவார் எம்பிரா னாவாரே. ௩

592 வேடுரு வாகி மகேந்திரத்து மிகுகுறை வானவர் வந்து
தன்னைத், தேட இருந்த சிவபெருமான் சிந்தனை செய்தடி
யோங்களுய்ய, ஆடல் அமர்ந்த பரிமாவேறி ஐயன் பெருந்
துறை ஆதிஅந்நாள், ஏடர் களையெங்கும் ஆண்டுகொண்ட
இயல்பறிவார் எம்பிரா னாவாரே. ௪

593 வந்திமை யோர்கள் வணங்கியேத்த மாக்கரு ணைக்கட
லாய்அடியார், பந்தனை விண்டற நல்கும்எங்கள் பரமன்
பெருந்துறை ஆதிஅந்நாள், உந்து திரைக்கட லைக்கடந்தன்
றோங்கு மதிலிலங் கைஅதனிற், பந்தணை மெல்விர லாட்கரு
ளும் பரிசறிவார் எம்பிரா னாவாரே. ௫

594 வேவத் திரிபுரம் செற்றவில்லி வேடுவ னாய்க்கடி நாய்கள்
சூழ, ஏவற்செ யல்செய்யுந் தேவர்முன்னே எம்பெரு மான்
தான் இயங்கு காட்டில், ஏவுண்ட பன்றிக் கிரங்கிஈசன்
எந்தை பெருந்துறை ஆதிஅன்று, கேவலங் கேழலாய்ப்
பால்கொடுத்த கிடப்பறிவார் எம்பிரா னாவாரே. ௬

595 நாதம் உடையதோர் நற்கமலப் போதினில் நண்ணிய நன்
னுதலார், ஓதிப் பணிந்தலர் தூவியேத்த ஒளிவளர் சோதி
யெம் ஈசன்மன்னும், போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப், பேதங்கெடுத்
தருள் செய்பெருமை அறியவல்லார் எம்பிரா னாவாரே. ௭

596 பூவலர் கொன்றையம் மாலைமார்பன் போருகிர் வன்புலி
கொன்றவீரன், மாதுநல் லாளுமை மங்கைபங்கன் வன்

பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன், ஏதில் பெரும்
புகழ் எங்களீசன் இருங்கடல் வாணற்குத் தீயில்தோன்றும்,
ஓவிய மங்கையர் தோள்புணரும் உருவறிவார் எம்பிரா
னாவாரே. அ

597 தூவெள்ளை நீறணி எம்பெருமான் சோதிம கேந்திர
நாதன்வந்து, தேவர் தொழும்பதம் வைத்தஈசன் தென்னன்
பெருந்துறை ஆளிஅன்று, காதல்பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக், கேதங் கெடுத்தென்னை
ஆண்டருளுங் கிடப்பறிவார் எம்பிரா னாவாரே. கூ

598 அங்கணன் எங்கள் அமரர்பெம்மான் அடியார்க் கமு
தன் அவனிவந்த, எங்கள் பிரான்இரும் பாசந்தீர இகபர
மாயதோர் இன்பமெய்தச், சங்கங் கவர்ந்துவண் சாத்தி
னோடுஞ் சதுரன் பெருந்துறை ஆளிஅன்று, மங்கையர் மல்
கும் மதுரைசேர்ந்த வகையறிவார் எம்பிரா னாவாரே. கo

திருச்சிற்றம்பலம்

## 44. எண்ணப்பதிகம் (599 - 604)

திருச்சிற்றம்பலம்

599 பாருரு வாய பிறப்பற வேண்டும் பத்திமை யும்பெற
வேண்டுஞ், சீருரு வாய சிவபெரு மானே செங்கம லமலர்
போல், ஆருரு வாயஎன் னாரமு தேஉன் அடியவர் தொகை
நடுவே, ஓருரு வாயநின் திருவருள் காட்டி என்னையும் உய்
யக்கொண் டருளே. க

600 உரியேன் அல்லேன் உனக்கடிமை உன்னைப் பிரிந்திங்
கொருபொழுதுந், தரியேன் நாயேன் இன்னதென் றறி
யேன் சங்கரா கருணையினாற், பெரியோன் ஒருவன் கண்டு
கொள் என்றுன் பெய்கழல் அடிகாட்டிப், பிரியேன் என்
றென் றருளிய அருளும் பொய்யோ எங்கள் பெருமானே. உ

601 என்பே உருக நின்அருள் அளித்துன் இணைமலர் அடி
காட்டி, முன்பே என்னை ஆண்டு கொண்ட முனிவா முனி
வர் முழுமுதலே, இன்பே அருளி எனையுருக்கி உயிருண்

கின்ற எம்மானே, நண்பே யருளா என்னுயிர் நாதா நின்
னருள் நாணுமே. ௩

602 பத்திலனேனும் பணிந்திலனேனும்உன் உயர்ந்தபைங்
கழல்காணப், பித்திலனேனும் பிதற்றிலனேனும் பிறப்
பறுப் பாய்எம் பெருமானே, முத்தனை யானே மணியனை
யானே முதல்வனே முறையோஎன், றெத்தனை யானும்
யான்தொடர்ந் துன்னை இனிப்பிரிந் தாற்றேனே. ௪

603 காணும தொழிந்தேன் நின்திருப் பாதங் கண்டுகண்
களிகூரப், பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன்
பின்னைஎம் பெருமானே, தாணுவே அழிந்தேன் நின்னினைந்
துருகுந் தன்மைஎன் புன்மைகளாற், காணும தொழிந்தேன்
நீயினி வரினுங் காணவும் நாணுவனே. ௫

604 பால்திரு நீற்றெம் பரமனைப் பரங்கரு ணையோடும்
எதிர்ந்து, தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ்
சோதியை நீதியிலேன், போற்றியென் அமுதே எனநினைந்
தேத்திப் புகழ்ந்தழைத் தலறியென் னுள்ளே, ஆற்றுவ னாக
உடையவ னேஎனை ஆவஎன் றருளாயே. ௬

திருச்சிற்றம்பலம்

## 45. யாத்திரைப்பத்து (605 - 614)

திருச்சிற்றம்பலம்

605 பூவார் சென்னி மன்னனெம் புயங்கப் பெருமான் சிறி
யோமை, ஓவா துள்ளம் கலந்துணர்வாய் உருக்கும் வெள்
ளக் கருணையினால், ஆவா என்னப் பட்டன்பாய் ஆட்பட்
டீர்வந் தொருப்படுமின், போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே. ௧

606 புகவே வேண்டா புலன்களில்நீர் புயங்கப் பெருமான்
பூங்கழல்கள், மிகவே நினைமின் மிக்கவெல்லாம் வேண்டா
போக விடுமின்கள், நகவே ஞாலத் துள்புகுந்து நாயே
அனைய நமையாண்ட, தகவே யுடையான் தனைச்சாரத் தளரா
திருப்பார் தாந்தாமே. ௨

607 தாமே தமக்குச் சுற்றமுந் தாமே தமக்கு விதிவகையும்,
யாமார் எமதார் பாசமார் என்ன மாயம் இவைபோகக்,
கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்தன் குறிப்பே
குறிக்கொண்டு, போமா றமைமின் பொய்நீக்கிப் புயங்கன்
ஆள்வான் பொன்னடிக்கே. ௩

608 அடியார் ஆனீர் எல்லீரும் அகல விடுமின் விளையாட்
டைக், கடிசே ரடியே வந்தடைந்து கடைக்கொண் டிருமின்
திருக்குறிப்பைச், செடிசே ருடலைச் செலநீக்கிச் சிவலோ
கத்தே நமைவைப்பான், பொடிசேர் மேனிப் புயங்கன்தன்
பூவார் கழற்கே புகவிடுமே. ௪

609 விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர் காலம் இனி
யில்லை, உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடன்போ
வதற்கே ஒருப்படுமின், அடைவோம் நாம்போய்ச் சிவ
புரத்துள் அணியார் கதவ தடையாமே, புடைபட் டுருகிப்
போற்றுவோம் புயங்கன் ஆள்வான் புகழ்களையே. ௫

610 புகழ்மின் தொழுமின் பூப்புனைமின் புயங்கன் தாளே
புந்திவைத்திட், டிகழ்மின் எல்லா அல்லலையும் இனியோர்
இடையூ றடையாமே, திகழுஞ் சீரார் சிவபுரத்துச் சென்று
சிவன்தாள் வணங்கிநாம், நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே. ௬

611 நிற்பார் நிற்கநில்லாவுலகில் நில்லோம் இனிநாம் செல்
வோமே, பொற்பால் ஒப்பாந் திருமேனிப் புயங்கன் ஆள்
வான் பொன்னடிக்கே, நிற்பீர் எல்லாந் தாழாதே நிற்கும்
பரிசே ஒருப்படுமின், பிற்பால் நின்று பேழ்கணித்தாற்
பெறுதற் கரியன் பெருமானே. ௭

612 பெருமான் பேரா னந்தத்துப் பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னைநீர் அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவந் திறந்தபோதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன் திருத்தாள் சென்று சேர்வோமே.

613 சேரக் கருதி சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள் பங்கன் புயங்கன் அருள
ஆரப் பருகி ஆராத ஆர்வங் கூர அழுந்துவீர் [முதம்
போரப் புரிமின் சிவன்கழற்கே பொய்யிற் கிடந்து புரளாதே.

614 புரள்வார் தொழுவார் புகழ்வாராய் இன்றே வந்தாள் ஆகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள்வீ ராகில் இதுசெய்மின் சிவலோ கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகலிடத்தே அந்தோ அந்தோஅந்தோவே.

திருச்சிற்றம்பலம்

## 46. திருப்படை யெழுச்சி (615 - 616)

திருச்சிற்றம்பலம்

615 ஞானவாள் ஏந்தும்ஐயர் நாதப் பறையறைமின்
மானமா ஏறும்ஐயர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே. க

616 தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள்
திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே. உ

திருச்சிற்றம்பலம்

## 47. திருவெண்பா (617 - 627)

திருச்சிற்றம்பலம்

617 வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன்—செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து. க

618 ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே என்செய்கேன்—தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்
தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து. உ

619 செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையின் உயிர்ப்பறியேன்—வையத்

திருந்துறையுள் வேல்மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்
பெருந்துறையில் மேய பிரான். ௩

620 முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரந் தீர்க்கும் மருந்து. ௪

621 அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற
மறையோனும் மாலும்மால் கொள்ளும்—இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையும் என்னெஞ்சத் தின்று. ௫

622 பித்தென்னை ஏற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை—அத்தன்
பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து ௬

623 வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதாய் அமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. ௭

624 யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. ௮

625 மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்—மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்பம் மிகும். ௯

626 இருந்தென்னை ஆண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே எல்லாந்—தருங்காண்
பெருந்துறையின் மேயபெருங் கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. ௧௦

627 இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றுந்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. கக

திருச்சிற்றம்பலம்

## 48. பண்டாய நான்மறை (628-634)

திருச்சிற்றம்பலம்

628 *பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்*
*கண்டாரு மில்லைக் கடையேனைத்—தொண்டாகக்*
*கொண்டருளுங் கோகழிஎங் கோமாற்கு நெஞ்சமே*
*உண்டாமோ கைம்மா றுரை.* க

629 உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த—வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு. உ

630 *காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்*
*நாட்டிற் பரிபாகன் நம்வினையை—வீட்டி*
*அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்*
*மருளுங் கெடநெஞ்சே வாழ்த்து.* ௩

631 *வாழ்ந்தார்கள் ஆவாரும் வல்வினையை மாய்ப்பாருந்*
*தாழ்ந்துலகம் ஏத்தத் தருவாருஞ்—சூழ்ந்தமரர்*
*சென்றிறைஞ்சி ஏத்தும் திருவார் பெருந்துறையை*
*நன்றிறைஞ்சி ஏத்தும் நமர்.* ௪

632 *நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல*
*எண்ணி எழுகோ கழிக்கரசைப்—பண்ணின்*
*மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்*
*கழியா திருந்தவனைக் காண்.* ௫

633 காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. ௬

634 பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின் மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல
28 மருந்தினடி என்மனத்தே வைத்து. ௭

திருச்சிற்றம்பலம்

## 49. திருப்படையாட்சி (635 - 642)

திருச்சிற்றம்பலம்

635 கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு களிப்பன ஆகாதே
காரிகை யார்கள்தம் வாழ்விலென் வாழ்வுகடைப்படும்ஆகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடும் ஆகாதே
மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும் வணங்குதும் ஆகாதே
பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுதுமாகாதே
4 விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே. ௧

636 ஒன்றினொடொன்றுமோரைந்தி னொடைந்தும் உயிர்ப்பறுமாகாதே
உன்னடி யாரடி யாரடி யோமென உய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது வாகாதே
காரண மாகும் அனாதி குணங்கள் கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்கம் நடந்தன ஆகாதே
நாமுமெ லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே
8 என்றுமென் அன்பு நிறைந்த பராவமு தெய்துவ தாகாதே
ஏறுடை யானெனை ஆளுடை நாயகன்என்னுள் புகுந்திடிலே.

637 பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராஅமு தாகாதே
அந்த மிலாத அகண்டமும் நம்முள் அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர் அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன்திரு மேனி திளைப்பன ஆகாதே
12 இந்திர ஞால இடர்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன் எதிர்ப்படு மாயிடிலே. ௩

638 என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன் இன்புறு மாகாதே
எல்லையில் மாக்கரு ணைக்கடல் இன்றினி நாடுது மாகாதே
நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திருநீற்றினை நித்தலும் நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவ தாகாதே
மாமறை யும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
16 இன்னியற் செங்கழு நீர்மலர் என்தலை எய்துவ தாகாதே
என்னையுடைப்பெருமான்அருள்ஈசன் எழுந்தருளப்பெறிலே.

639 மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே
வானவ ரும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே
காதல்செ யும்அடி யார்மனம் இன்று களித்திடு மாகாதே
பெண்ணலி ஆணென நாமென வந்த பிணக்கறு மாகாதே
பேரறி யாதஅ னேக பவங்கள் பிழைத்தன ஆகாதே
20 எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை எய்துவ தாகாதே
என்னையுடைப் பெருமான்அருள் ஈசன்எழுந்தருளப் பெறிலே.

640 பொன்னிய லுந்திரு மேனிவெண்ணீறு பொலிந்திடுமாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள்கருத்து வெளிப்படுமாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுந்திடு மாகா
தன்னடி யாரடி என்தலை மீது தழைப்பன ஆகாதே [தே
தானடி யோம்உட னேஉ(ய்)ய வந்து தலைப்படு மாகாதே
24 இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக இயம்பிடு மாகாதே
என்னைமுன் ஆளுடைஈசன்என் அத்தன் எழுந்தருளப் பெறிலே.

641 சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னிய சோதி தொடர்ந்தெழு
பல்லியல் பாய பரப்பற வந்த பராபர மாகாதே [மாகாதே
பண்டறி யாதப ரானுப வங்கள் பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்று விளைந்திடு மாகாதே
விண்ணவ ரும்அறி யாத விழுப்பொருள் இப்பொருளாகாதே
28 எல்லையி லாதன எண்குண மானவை எய்திடு மாகாதே
இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தரு ளப்பெறிலே.

642 சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன ஆகாதே
சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனு மாயை அடங்கிடு மாகாதே
ஆசைஎ லாம்அடி யாரடி யோம்எனும் அத்தனை யாகாதே
செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பன ஆகாதே
சீரடி யார்கள் சிவானு பவங்கள் தெரிந்திடு மாகாதே
எங்கும் நிறைந்தமு தூறு பரஞ்சுடர் எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோன்எனை ஆளஎழுந்தரு ளப்பெறிலே.

திருச்சிற்றம்பலம்

## 50. ஆனந்தமாலை (643 - 649)

திருச்சிற்றம்பலம்

643 மின்னே ரனைய பூங்கழல் களடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு போற்றா நின்றார் அமரரெல்லாங்
கல்நே ரனைய மனக்கடையாய்க் கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக் கூடும் வண்ணம் இயம்பாயே.

644 என்னால் அறியாப் பதந்தந்தாய் யான தறியா தேகெட்
டேன், உன்னால் ஒன்றுங் குறைவில்லை உடையாய் அடி
மைக் காரென்பேன், பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடுங்கூடா, தென்நா யகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. உ

645 சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்துகிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங்காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே.

646 கெடுவேன் கெடுமா கெடுகின்றேன் கேடி லாதாய் பழி
கொண்டாய், படுவேன் படுவ தெல்லாம்நான் பட்டாற் பின்
னைப் பயனென்னே, கொடுமா நரகத் தழுந்தாமே காத்தாட்
கொள்ளுங் குருமணியே, நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கள் நாயகமே. ச

647 தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலை
யாய், நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தான் நல்கு
தியே, தாயே யென்றுன் தாளடைந்தேன் தயாநீ என்பா

வில்லையே, நாயேன் அடிமை உடனாக ஆண்டாய் நான்தான் வேண்டாவோ. ரு

648 கோவே யருள வேண்டாவோ கொடியேன் கெடவே அமையுமே, ஆவா வென்று விடிலென்னை அஞ்சேல் என்பார் ஆரோதான், சாவா ரெல்லாம் என்னளவோ தக்க வாறன் றென்றாரோ, தேவே தில்லை நடமாட திகைத்தேன் இனித் தான் தேற்றாயே. சு

649 நரியைக் குதிரைப் பரியாக்கி ஞால மெல்லாம் நிகழ்வித் துப், பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்ச தேற்றும் பெருந்துறையாய், அரிய பொருளே அவிநாசி அப்பா பாண்டி வெள்ளமே, தெரிய அரிய பரஞ்சோதீ செய்வ தொன்றும் அறியேனே. எ

திருச்சிற்றம்பலம்

## 51. அச்சோப்பதிகம் (650 - 658)

திருச்சிற்றம்பலம்

650 முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. க

651 நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தையெனக்
கறியும் வண்ணம் அருளியவா றார்பெறுவார் அச்சோவே. உ

652 பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. ௩

653 மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட் டென்னையுந்தன் [ம்
சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ண
அண்ணல்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. ச

654 பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேன்உன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேன்நான் உடையானே அடியேனை வருகஎன்
றஞ்சேலென் றருளியவா றார்பெறுவார் அச்சோவே. ௫

655 வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழல் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறஎன் துரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. ௬

656 தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. ௭

657 சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. ௮

658 செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. ௯

திருச்சிற்றம்பலம்

**திருவாசகம் முற்றிற்று.**

ஆகத் திருப்பதிகங்கள் ௫௧-க்குப் பாடல் தொகை - ௬௫௮.

---

செத்திடமும் பிறந்திடமு மினிச்சாவா திருந்திடமும்
அத்தனையு மறியாதார் அறியுமறி வெவ்வறிவோ
ஒத்தநில மொத்தபொருள் ஒருபொருளாம் பெரும்பயனை
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.*

படியதனிற் கிடந்திந்தப் பசுபாசந் தவிர்ந்துவிடும்
குடிமையிலே திரிந்தடியேன் கும்பியிலே விழாவண்ண
நெடியவனு நான்முகனு நீர்கான்றுங் காணவொண்ணா
அடிகளெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.*

பாதியெனு மிரவுறங்கிப் பகலெமக்கே யிரைதேடி
வேதனையி லகப்பட்டு வெந்துவிழக் கடவேனைச்
சாதிகுலம் பிறப்பறுத்துச் சகமறிய வெனையாண்ட
ஆதியெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.*

## திருவாசகச் சிறப்பு

தொல்லை யிரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லல்அறுத்(து) ஆனந்தம் ஆக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகம்என்னும் தேன்.

திருவா சகமென்னுந் தேன்பெருகித் தேசமெல்லாம்
கருவே ரறுத்தருளிக் கருங்கடலை வேர்துளைத்திட்
டுருவா சகமென்னு முண்மையுணர்ந் துத்தமனார்
திருவா சகமென்னுந் தேனினருட் காரணமே.†

கண்மதகு மென்புளகக் காடும் படைத்தோனும்
வண்மையருள் மாணிக்க வாசகனு—முண்மையினிற்
றானந்த மாவானுந் தன்னொழிவு காணானு
மானந்த வாதவூரன்.†

போதலர்ந்து தேன்சொரியும் பொன்னம் பலத்திலுறை
வாதவூ ரெங்கோமான் வாசகத்தை—ஓதிப்
பிறவிப் பிணிநீக்கிப் பேரின்ப வெள்ளச்
செறிவுக்குள் செல்வர் சிறந்து.†

வேதாந்தத்தின் பொருள்விளக்காய் மெய்யாகமத்தின் மதமாயா
நாதாந்தத்தின் சுடருருவாய் ஞானநேயத்தின் விளக்காய்ப்
போதாந்தத்தின் பொருளாகிப் புகழுந் திருவாச கப்பொருளை
மீதாந்தத்தி லுணர்ந்தவரே விட்டார் பாசங் கிட்டாரே.†



இம்மூன்று பாடல்களும் சில ஏட்டுப் பிரதிகளில் காணப்படு கின்றன. † இவை ஏட்டுப் பிரதிகளில் காணப்படுவன.

சிவமயம்

# திருவாசகத் திருவுள்ளக்கிடை

[பிரதிகளிற் காணப்படும் வேற்றுமைகள் [ ] என்று பக வரைகளுள் தரப்பட்டுள்ளன.]

சிவபுராணம் - சிவனது அநாதி முறைமையான பழமை; என்பது, சிவனது அருவநிலைமை கூறுதல். [சிவபுராணமும் கீர்த்தித் திருவகவலும் சிவனுடைய உயிர் அருள் நிலைமை என்பது அருவநிலை.] கீர்த்தித்திருவகவல் - சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை. [சிவனுடைய அருளின் முறைமை.] திருவண்டப்பகுதி - சிவனுடைய தூலசூக்குமத்தை வியந்தது. [சிவனுடைய தூல சூக்குமத்தை விகற்பித்தது, யோகநூல் தூல சூக்குமத்தை வியந்தது.] போற்றித் திருவகவல் - சகத்தினுற்பத்தி; என்பது, பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல். [ஞானஞ் சகத்து உற்பத்தி.] திருச்சதகம் - பத்தி வைராக்கிய விசித்திரம்; என்பது, பத்துவகையாக இரட்சித்த முறைமை; க. மெய்யுணர்தல் - தேகாதி பிரபஞ்சங்களைக் கண்டு நீங்கல்; உ. அறிவுறுத்தல் - பொறியோடே கூட்டுதல், அருள் தரிசனம், குருதரிசனம்; ங. சுட்டறுத்தல் - தன் செயலறுத்தல் [ஆனந்தத் தழுந்தல்]; ச. ஆத்தும சுத்தி - அனுபவத்தழுந்தல் [ஆனந்தபரவசமாதல்]; ரு. கைம்மாறு கொடுத்தல் - தன்னைச் சிவத்தினிடத்திலே கொடுத்தல் [ஆனந்தாதீதமாதல்]; சு. அனுபோகசுத்தி - சுகமேலீடு [சுட்டறி வொழித்தல்]; எ. காருணியத்திரங்கல் - சிவனுடைய வெற்றிப்பாட் டிரங்கல் [ஆத்துமசுத்தி]; அ. ஆனந்தத் தழுந்தல் [கைம்மாறு கொடுத்தல்]; கூ. ஆனந்தபரவசம் [அனுபவசுத்தி]; கo. ஆனந்தாதீதம். நீத்தல் விண்ணப்பம் - பிரபஞ்ச வைராக்கியம். [நீத்தல் விண்ணப்பமும் திருவெம்பாவையும் தெசசத்திகளை விகற்பித்தது. தெச சத்திகளாவன: அம்பிகை, ஞானம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி ஆக பத்து.] திருவெம்பாவை - சத்தியை வியந்தது; சக்திகளாவார் அம்பிகை, கணம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என ஒன்பதின்மர். [தெச சத்திகளையும் வியந்தது.] திருவம்மானை - ஆனந்தக் களிப்பு; என்பது, சுகமேலீடு. [ஆனந்தக் கனிவு.] திருப்பொற்சுண்ணம் - ஆனந்த மனோலயம்; என்பது, தானன்றி நிற்றல். [திருச்சுண்ணம் என்பது தன்னறி நிற்றல்.] திருக்கோத்தும்பி - சிவனோ டைக்கியம்;

என்பது, சிவனுடன் இடையறுது நிற்றல். திருத்தெள்ளேணம் - சிவனேடுடைவு; என்பது, சிவனுடனே சென்று கூடுதல். [சிவனுடைச் செலவு.] திருச்சாழல் - சிவனுடைய காருணியம்; என்பது சிவனுடைய அருட்சத்தி விளையாட்டு. திருப்பூவல்லி - மாயாவிசய நீக்குதல்; என்பது, மாயையினுடைய பலத்தை மறுத்தல். [மாயா விஷய மறுத்தல்.] திருவுந்தியார் - ஞானவெற்றி அருட்சத்தியினுடைய சாமர்த்தியம். [ஞானவெற்றிப் பாடு.] திருத்தோணேக்கம் - பிரபஞ்ச சுத்தி; என்பது, ஆன்மாக்களைச் சுத்திகரித்தல். திருப்பொன்னூசல் - அருட்சுத்தி; என்பது, அருளோடு கூடுதல். [அருள்கூட்டம் என்பது அருளோடே கூடினது.] அன்னைப்பத்து - ஆத்தும பூரணம்; என்பது, ஆன்மா சிவனுடனே நிறைதல். [ஆத்தும சம்பூரணம்.] குயிற்பத்து - ஆத்தும விரக்கம்; என்பது, சிவனைக் கண்டிரங்குதல். [ஆத்தும விகாரம் என்பது சீவனைக் கண்டிரங்குகிறது.] திருத்தசாங்கம் - அடிமை கொண்ட முறைமை; என்பது, பத்தடையாளம். [பத்து வகையாய் அடிமைகொண்டது.] திருப்பள்ளியெழுச்சி - திரோதான சுத்தி; என்பது, ஏகமாகிய திரோதாயி மறைப்பான மலம் நீக்குதல். கோயின் மூத்ததிருப்பதிகம் - அநாதியாகிய சற்காரியம். [சிவானந்தத்தில் திகைப்பு என்பது சிவானந்தம் அளவறுக்கொண்ணுமை.] கோயிற்றிருப்பதிகம் - அனுபோக விலக்கணம்; என்பது, சிவானுபூதிக் கடையாளம். செத்திலாப்பத்து - சிவானந்த மளவறுக்கொணுமை; என்பது, சிவானந்த மணுகிச் செயிக்கப்படாமை. [சிவானந்த மலைவு.] அடைக்கலப்பத்து - பக்குவ நிண்ணயம்; என்பது, வித்துமங்குரமும்போல என்றல் [வஸ்து நிண்ணயம்.] ஆசைப்பத்து - ஆத்தும விலக்கணம்; என்பது, ஆன்மபேதத்தை யறிதல். [ஆத்தும ரூபத்தை யறிதல்.] அதிசயப்பத்து - முத்தியிலக்கணம்; என்பது, மோட்சத்தி னடையாளம். புணர்ச்சிப்பத்து - அத்துவித விலக்கணம்; என்பது ஒன்றுமல்ல இரண்டுமல்ல என்றல். [அத்துவிதானந்த இலக்கணம்.] வாழாப்பத்து - முத்தி யுபாயம்; என்பது பிரபஞ்சத்தைவிட்டுப் பரபோகத்தைக் கூடுதற்குபாயம். [மோட்ச உபாயம், மோட்ச லட்சணம்.] அருட்பத்து - மகாமாயா சுத்தி; என்பது, மாயையைச் சுத்தி பண்ணுதல். திருக்கழுக்குன்றப் பதிகம் - குருதரிசனம்; என்பது பசுத்துவங் கெட்டவிடம். [சற்குரு தெரிசனம்.] கண்டபத்து - நிருத்த தரிசனம். [பரமானந்த நிருத்த தெரிசனம்.] பிரார்த்தனைப்பத்து - சதாமுத்தி; என்பது ஆன்மாக்களுக்கு முத்தி நிச்சயம் பண்ணுதல்.

[செகமுத்தி.] குழைத்தபத்து - ஆத்தும நிவேதனம்; என்பது, நேயத்தோடே ஒன்றினது. [குழைத்தல்.] உயிருண்ணிப்பத்து - சிவானந்த மேலிடுதல்; என்பது, நேயமேலிடுதல். அச்சப்பத்து - ஆனந்த முறுதல்; என்பது, நேயத்திலே ஒன்றுபட்டுச் சிக்கென அழுந்தினது. [ஆனந்த முற்றுதல்.] திருப்பாண்டிப் பதிகம் - சிவானந்த விளைவு; என்பது, சுகமேலீடு. [திருப்பாண்டி விருத்தம்; சிவானந்த விரைவு.] பிடித்தபத்து - முத்திக்கலப்புரைத்தல்; என்பது, மற்றுள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின் சுகத்தைச் சொல்லியது. திருவேசறவு - சுட்டறிவொழித்தல்; என்பது தன்செயலற நிற்றல். [ஏசறப்பத்து சுட்டறிவு ஒழிதல்.] திருப்புலம்பல் - சிவானந்த முதிர்வு; என்பது, சிவானந்தம் பெருவிச்சை. [சிவானந்த மிடி.] குலாப்பத்து - அனுபவ மிடையீடுபடாமை; என்பது விட்டுப் பற்றுமல் ஒரு தன்மையாவது. [அனுபவம் இடையறுமை.] அற்புதப்பத்து - அனுபவம் ஆற்றுமை; என்பது, அனுபவமுற்றுதல் பொறுமை விம்முதல். சென்னிப்பத்து - சிவவிளைவு; என்பது, சீவனுக்கு நிச்சயப்படுதல். [சிவனுக்கு நிச்சயப்படுதல்.] திருவார்த்தை - அறிவித் தன்புறுதல்; என்பது உன்னுலறியப்படாததுரைக்க அறியென்றது. [அறிவிக்க அறிதல் என்பது உன்னுல் அறியப்படாதது நானுக அறி என்றது.] எண்ணப்பதிகம் - ஒழியா வின்பத்துவகை; என்பது தேகமுதலாகிய ஆசையை அறுத்தல். [எண்ணப்பத்து அவாவினை ஒறுத்தல்.] யாத்திரைப்பத்து - அனுபவாதீத முரைத்தல்; என்பது அனுபவத்தி லதீதப்பட்டுப் போனது. திருப்படை யெழுச்சி - பிரபஞ்சப்போர்; என்பது, மலவிளைவற்றது. திருவெண்பா - அணைந்தோர் தன்மை; என்பது, பரிசவேதிபோல என்றது. பண்டாய நான்மறை - அனுபவத்துக் கைய மின்மை யுரைத்தல். [அனுபவத்துக் கைம்மாறுரைத்தல்—இப்படி இரட்சிக்கப்பட்ட ஆசாரியற்குக் கைம்மாறில்லை என்றது.] திருப்படையாட்சி - சீவ உபாதி யொழித்தல்; என்பது, கிரியா சூனியம். [பிரபஞ்சத்தில் சீவ உபாதி ஒழித்தல்.] ஆனந்தமாலை - சிவானுபவ விருப்பம்; என்பது, சிவானந்த மேலீட்டில் கிரியாசத்தியழிவுரைத்தல். [மின்னேரனைய பூங்கழல் வழக்கழித்தல், வழக்கறிவுரைத்தல்.] அச்சோப்பதிகம் - அனுபவவழி யறியாமை; என்பது, அனுபவத்ததிசயம். [அச்சோப்பத்து-அனுபவம் வந்தவழி அறியாமை அனுபவதிசயம் என்பது அனுபவம் வழி யறியாமை.]

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# திருவாசக உண்மை

## சிவபுராணம்

தேசுறுமா ணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்தில்
பேசுதிருச் சிவபுரா ணத்தகவற் பெருமைசொலில்
ஈசர்தமக் கியல்பான திருநாம முதலெவையும்
மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம்.

## கீர்த்தித்திருவகவல் - திருவண்டப்பகுதி

புகழ்பெருகுஞ் செய்கையெலாம் புகல்அகவல் ஒன்றுகும்
திகழ்திருவண் டப்பகுதித் திருவகவல் செப்பியது
தகுசிருட்டி திதியொடுக்கஞ் சாற்றுதிரோ தம்பொதுவாய்
அகலமுறத் தேர்ந்திடவே யருளியநற் பொருளாகும்.

## போற்றித்திருவகவல் - திருச்சதகம் - நீத்தல்விண்ணப்பம்

முத்திபெறு நெறியறியு மொழிபோற்றித் திருவகவல்
சத்தியஞா னந்தருதே சிகர்மோகஞ் சதகமதாம்
மித்தையுல கினையகற்றி விடாமலெனை யாண்டருளென்
றத்தரறிந் திடநீத்தல் விண்ணப்பம் அறைந்ததுவாம்.

## திருவெம்பாவை - திருவம்மானை

மலவிருளுற் றுறங்காமல் மன்னுபரி பாகரருள்
செலமுழுக வருகவெனச் செப்பல்திரு வெம்பாவை
நலமுறு மந்தணர் வடிவாய் நாரணன்காண் பரியபதம்
நிலமதில்வந் தாள்கருணை நினைந்தாட லம்மானை.

## திருப்பொற்சுண்ணம் - திருக்கோத்தும்பி

சத்திகளாற் றனுகரண புவனபோ கங்கள்தமை
அத்தனுக்குச் சுண்ணமவை யாயிடிக்கக் கூவுதலே
ஒத்ததிருச் சுண்ணமுயர் போதமொரு வண்டாகச்
சித்தவிகா ரத்தூது செப்பிவிடல் கோத்தும்பி.

### திருத்தெள்ளேணம் - திருச்சாழல்

*பொன்னார்மெய் யண்ணலரும் போதவின்ப மேமிகுந்து*
*தென்றென் றெனவே தெள்ளேணங் கொட்டியதாம்*
*முன்னாற் கலையுமுணை ராமுகை யாமேடி*
*தன்னாற் பதிமுதன்மை சாற்றியதாந் திருச்சாழல்.* ௬

### திருப்பூவல்லி - திருவுந்தியார்

*தேவரறி யாதசிவன் தேடியே யாண்டநலம்*
*ஆவலொடுஞ் சொல்லி யடியாரொ டுங்கூடிப்*
*பூவியந்து கொய்தல்திருப் பூவல்லி யாமரன்சீர்*
*பாவமுறு தீமையறப் பாடல்திரு வுந்தியதே.* ௭

### திருத்தோணோக்கம் - திருப்பொன்னூசல்

*சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய்*
*அத்தன் செயுங்கருணைக் காராமை யுண்மிகுந்து*
*பொத்தியகை கொட்டிப் புகழ்தல்தோ ணோக்கமருள்*
*சத்தியிருந் தாடத்தா லாட்டிடுதல் பொன்னூசல்.* ௮

### திருவன்னைப்பத்து - குயிற்பத்து

*நேயம்மி குந்த நிலைகுலையக் கூடுதலை*
*ஆயவருட் டாய்க்கங் கறைதலன்னைப் பத்தாகும்*
*தூயவருட் குயிலேநற் சோதியெனைக் கூடுதற்குன்*
*வாயினாற் கூவெனமுன் வாழ்த்தல்குயிற் பத்தாமே.* ௯

### திருத்தசாங்கம் - திருப்பள்ளியெழுச்சி

*பேர்நாடு ராறுமலை பெயரூர்தி படைமுரசு*
*தார்கொடியெ லாமரற்குச் சாற்றல் தசாங்கமதாம்*
*ஏர்மருவு திருப்பள்ளி யெழுச்சிபணி விடைகேட்*
*டார்வமுட னண்டவரற் கன்புசெயு மியல்பே.* ௧௦

### கோயின்மூத்ததிருப்பதிகம் - கோயிற்றிருப்பதிகம்
### செத்திலாப்பத்து - அடைக்கலப்பத்து

கோயின்மூத்த திருப்பதிகஞ்சிதம்பரத்திலருளடையுங் குறிப்பதாகும்
ஏயுங்கோயிற்றிருப்பதிகம்பெருந்துறைத் தேசிகர்மோகமியம்பலாகு

ஆயபசுபோதம்முற்றுங்கெடவேண்டலேசேத்திலாப்பத்தாகும் [ம்
ஓதுவல்வாதனைகள்வந்தணுகாமலடைக்கலப்பத்துரைத்ததாமே. கக

ஆசைப்பத்து - அதிசயப்பத்து

கருவியுறு மூனுடற்கண் வாராமற் றிருவருளிற் கலப்பதற்கே
அரனடியைப்புகழ்ந்து பெருகார்வமொடுபாடுதலேயாசைப்பத்தாம்
வெருவிமலத்தினைச்சீலத்தொன்முருமடியர்குழாத்துடனேகூட்டும்
பரமரருட்பெருமைமிகுதியைப்புகழ்ந்துபாடலதிசயப்பத்தாமே.

புணர்ச்சிப்பத்து - வாழாப்பத்து

ஆண்டகுரு வைப்பிரியா தணைந்துபணி புரிந்துமிகு மன்போ டின்பம், பூண்டுகிடக் கப்பெறுவ தென்றுகொலோ வெனும்விருப் பம் புணர்ச்சிப் பத்தாம், நீண்டவுல கத்தினிற்பற் றொன்றிலே னிவ்வுடற்க ணின்று வாழேன், மாண்டகுநின் பதநிழற்கீழ் வருக வருள் புரியெனுஞ்சொல் வாழாப் பத்தே. கஉ

அருட்பத்து - திருக்கழுக்குன்றப்பதிகம்

சோதியருட் சுடர்விளக்கே துயர்ப்பிறவிக் கூடல்விடுத் துன் ருள் சேர்தற், காதரித்திங் குனையழைத்தா லதெந்துவெனக் கேளெ னுஞ்சொல் அருட்பத் தாகும், நீதிமறை பரவுதிருப் பெருந்துறையிற் குருவடிவாய் நிகழ்ந்த கோலம், காதலொடுங் காட்டினையே யெனுங் களிப்புப் பகர்தல்திருக் கழுக்குன்றமே. கச

கண்டபத்து - பிரார்த்தனைப்பத்து

இந்திரிய வயமயங்கா தேயெடுத்துத் தானுக்கு மெழிலா னந் தம், கந்தமலி தில்லையினுட் கண்டேனென் றுவந்துரைத்தல் கண்ட பத்தாம், அந்தமிலா வானந்தத் தகலாம லெனையழுத்தி யாள்வா யென்று, சிந்தைகலந் துரைத்ததுவே பிரார்த்தனைப்பத் தாய்ப்புக லுஞ் செய்கை யாமே. கடு

குழைத்தபத்து - உயிருண்ணிப்பத்து

இழைத்தேனிவ் வாக்கைபொறுத் தினிக்கணமும் பொறுக் ககிலே னேழையேனைக், குழைப்பதேன் பிழைபொறுத்தா ளென விரங்கிக் கூறுதலே குழைத்த பத்தாம், தழைத்துவளர் பேரின்பந்

தானுகி யுயிர்தோன்ருத் தன்மை யாய்த்துன், பொழித்துநிறை வைப்பெறுத லுயிருண்ணிப் பத்தாயிங் குரைத்த தாமே. கசு

அச்சப்பத்து - திருப்பாண்டிப்பதிகம்

தரையில்வளர் வினைமுழுதும் வரினுமஞ்சேன் சிவசமயத் தவஞ்சா ராதார், அருகின்வரக் காண்கின்மன மஞ்சுமென விகழ்ந் துரைத்த லச்சப் பத்தாம், புரவியின்மேற் பாண்டியன்முன் வரும் பதத்தை யாம்பெறுமற் புதம்போல் யாரும், விரவுமின்க ளென்றடி யார்க் குறுதிசொலல் திருப்பாண்டி விருத்த மாமே. கஎ

பிடித்தபத்து - திருவேசறவு

மிக்கபிற வித்துயரெ லாமொழித்து விபுத்துவமிங் களித்த லாலே, பிக்கறச் சிக்கெனப் பிடித்தே னின்னை யென்று துணிவுசெப் பல் பிடித்த பத்தாம், தக்கபரி யாய்நரியை யாக்குதல்போ லெனைப் பெரிதாய்த் தாக்கித் தாட்கீழ், அக்கணம்வைத் தனையேயென் றிரங் கல்திரு வேசறவென் றியம்பலாமே. கஅ

திருப்புலம்பல் - குலாப்பத்து

கரைந்துருகும் பேரன்புன் கழலிணைக்கே கற்ருவின் மனம்போ லென்றும், திருந்தும்வகை யெனக்கருள்க வெனக்கேட்டல் திருப் புலம்ப லாகுமுள்ளம், விரும்புசிவா னந்தவெள்ளம் விழைந்ததில்லை நாயகனை மிகக்கொண்டாடி, நிரம்புமனக் களிமிகுத்த விறுமாப்பே குலாப்பத்தாய் நிகழ்த்த லாமே. கக.

அற்புதப்பத்து - சென்னிப்பத்து

மாயவுருக் கொண்டுளத்தை மயக்குமின்னுர் கண்வலையுண் மயங்கு வேற்கிங், காயுமறி வளித்தாள லதிசயமென் றுரைத்தலற்பு தப்பத் தாகும், தூயவருட் குருபதத்தைச் சூட்டுதற்குப் பெற்றவுயிர் சுகத்தை நோக்கிச், சேயமலர்ப் பதத்தருமை யடியரொடும் வியந் துரைத்தல் சென்னிப் பத்தே. ௨௦

திருவார்த்தை - எண்ணப்பதிகம்

அறம்பெருகும் பெருந்துறையிற் றமையாண்ட செயன்முதலா வரன்சீ ராட்டின், திறமறிவா ரெம்பிரா னுவரென வுரைத்தல்திரு வார்த்தையாகும், நிறம்வளரு மலர்ப்பொழில்சூழ் தோங்குதிருத்

தில்லைமன்று ணிமலனுமைத், திறம்பெருகு மின்பமரு ளென்றலெண்ணப் பத்தெனவும் திகழ்த்த லாமே. உக

யாத்திரைப்பத்து - திருப்படையெழுச்சி

பொல்லாத பவத்தைவிட்டுச் சிவன்கழற்கீழ்ப் புகுங்காலம் புணர்ந்த தெற்கிங், கெல்லாரும் வாருமெனக் கருணையினு லழைத்திடல்யாத் திரைப்பத்தாகும், அல்லாத துர்க்குணமா யப்படைகள் விளையாம லருள்வா ளேந்தி, நல்லோர்க ளியாருமெம்மோ டெய்துமெனப் படையெழுச்சி நவிறலாகும். உஉ

திருவெண்பா - பண்டாயநான்மறை

தொந்தமா மலமொறுத்துச் சுகம்பெருக்கிப் பெருந்துறைவாழ் சோதி யென்றன், சிந்தனையே யூராகக் கொண்டிருந்தா ரென்றுரைத்தல் திருவெண் பாவாம், எந்தைதிருப் பெருந்துறையையேத்துமம ரேவாழ்வுற் றிடர்சேர்பாச, பந்தமறுத் திடுவரெனப் பண்டாய நான்மறையும் பகர்ந்த தாமே. உந

திருப்படையாட்சி - ஆனந்தமாலை - அச்சோப்பதிகம்

வாகுதிருப் பெருந்துறையா ரெழுந்தருளப் பெறிலெல்லாவளங்கள் முற்றும், ஆகுமெமக் கல்லாத தாகாதென் றியம்பல்படையாட்சி யாகும், மோகமிகு மடியரொடுங் கூடவிரும்பியதானந்தமொழியு மீசர், போகசுக மெனக்களித்தா ரார்பெறுவா ரெனுமருமை புகற லச்சோ. உச

இவ்விருபத்து நான்கு செய்யுட்களும் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய திருப்பெருந்துறைப் புராணத்துள் காணப்படுகின்றன.



உ

சிவமயம்

# திருவெம்பாவைக் கருத்து*

ஆடி மாதமுதல் மார்கழி மாதவரையும் இராத்திரியாகவும், தை மாதமுதல் ஆனிமாதம்வரையும்பகலாகவுமிதுதேவர்களுக்கொரு நாள். சங்கார காலத்துக்குஞ் சிருஷ்டிகாலத்துக்கும் பிரமாணமாக இந்த ஆறு மாதமும் பிரிந்து நடக்கும். மார்கழி மாதம் உதய காலமாய் இது சிருஷ்டிகாலத்துக் கேதுவாயிருக்கும். பிரபஞ்ச சிருஷ்டியைத் திருவுளத்தடைத்து வைந்தவசத்தியைச் சிருஷ்டிக்கத் தொடங்குகிற அவசரந் திருப்பள்ளியெழுச்சியென வழங்கும்.

இனி, அந்தச் சுத்தமாயை நாதவிந்துகளாகவுஞ் சாதாக்கியமாகவும், மகேசுரமாகவும், சுத்தவித்தையாகவும் அஞ்சுதலமாயிருக்கும். நாதவிந்துகளாகிய தலங்களிலே பரமும் பரையும், அதிஷ்டிக்கும். சாதாக்கியமாகிய தலத்திலே சதாசிவமூர்த்தி யெழுந்தருளியிருப்பர். போகாங்கங்களாகிய அணுசதாசிவரே சேவிக்கவும் இதன் கீழே யீசுரற் கதிட்டானமாகிய மகேசுர தலத்திலே யனந்தாதி யஷ்டவித்தியேசுரர் சேவிக்கவும் இதன் கீழே யுருத்திரர்க் கதிஷ்டானமாகிய சுத்தவித்தியா தலத்திலே மந்திரேசுவரர் சேவிக்கவு மிப்படி பிரபஞ்சவனுக்கிரக காரியமாகப் பராசத்தியிற்றோன்றிய ஞானக்கிரியைகளொத்த விச்சையே திருமேனியான சதாசிவமூர்த்தி திருவருளாலந்த மகேசுர தத்துவத்திலே சத்திமண்டலத்தி லிருந்த மனோன்மனிச் சத்தியைப் பிரேரிக்க அந்தச் சத்தி சருவபூத தமனியைச் சிருஷ்டிக்க அந்தச் சருவ பூத தமனி பெலப்பிரம தனியைப் பிரேரிக்க அந்தச் சத்தி பெலவி கரணியைப் பிரேரிக்க அந்தச் சத்தி காளியைப் பிரேரிக்க அந்தச் சத்தி இரவுத்திரியைப் பிரேரிக்க அந்தச் சத்தி சேட்டையைப் பிரேரிக்க அந்தச் சத்திவாமையைப் பிரேரிக்க இப்படி பிரேரியா நிற்கப்பட்ட நவசத்திகள் பிரேரகத்தினால் மாயையை யதிஷ்டித்திருக்கிற அனந்த தேவராலே அசுத்த மாயை காரியப்பட்டுப் பிருதிவி முடிவான பிரபஞ்ச காரியம் நடக்கும். இனி,

---

*இது 1871௵ மகா வித்வான் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரவர்கள் வெளியிட்ட பதிப்பிலுள்ளது.

ஆதியுமந்தமும் - மனோன்மனியென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ச் சர்வபூத தமனியை யுணர்த்தும். பாசம்பரஞ்சோதி - சர்வபூத தமனியென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ப் பெலப்பிரமதனி யென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது. மூத்தன்ன - பெலப்பிரம தனியென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ப் பெலவிகரணியென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது. ஒண்ணித்தில - பெலவிகரணியென்னுஞ் சத்தியின் திருவாக்காய்க் காளியென்னுஞ்சத்தியை யுணர்த்துகிறது. மாலறியா - காளியென்னுஞ் சத்தியின் திருவாக்காய் இரவுத்திரி யென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது. மானேநீ - இரவுத்திரி யென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ச் சேட்டையென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது. அன்னேயிவையும் - சேட்டையென்னுஞ் சத்தியின் திருவாக்காய் வாமையென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது. கோழிசிலம்ப - வாமையென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ச் சுத்த மாயையைப் பிரேரிக்கிற அநந்ததேவரை யாசரித்து அப்பால் பிரகிருதியில் விகுர்தியான ஆத்மதத்துவம் நடப்பது பொருட்டாக விஷ்ணுவினிடத்தில் அதிஷ்டிக்கிற சிவசத்தியை நோக்கி ஆழியானன்புடைமையாமாறு மிவ்வாறேவென்று பிரேரித்ததாகக் கருதினது. ஆக இப்படி நவசத்திகள்கூடி விசுவகாரியம் பண்ணுகிறதே பாட்டாகப் பாடியபடி.

முன்னைப் பழம்பொருள் - அனாதியா யுள்ளவர்களுக்கெல்லாம் அனாதியாயுள்ளவனுமாய் அனுபவிப்பவர்களுக்கு மேன்மேலும் புதுமை கொடுக்கும் ஆநந்தத்தைக் கொடுப்போனுமாயிருக்கிற உன்னடியார் அடிபணிதலும் அவர்களை யாசரித்தலும் அவர்களே பத்தாவாக அங்கீகரித்தலும் அவரேவற் பணிசெய்தலும் யாங்களுரிமையாயிந்த முறைமை யொழியாவண்ணம் பிரசாதித்தருளி லொருகுறைப் பாடு மில்லோமென்று நவசத்திகளுந் தம்மிற்சொல்லியது.

உன்னடியா ரென்பது :—விஞ்ஞானகலரில் மலபக்குவராய் அணுசதாசிவரென்னும் பேர்பெற்றிருப்பார் ஒருவகையும், அதிகார மலத்துடனே கூடியனந்தாதி யஷ்டவித்தி யேசுரரென்னும் பேர் பெற்றிருப்பார் ஒருவகையும், ஆணவமல சகிதராய்ச் சத்தகோடி மகாமந்திரேசுரரென்று பேர்பெற்றிருப்பார் ஒருவகையுமாக, விஞ்ஞானகலர் மூன்றுவகையையு முன்னடியாரென்றது. இனி நிரை நிரையாக அணுசதாசிவர் தாள்பணிவோம், அட்டவித்தியேசுரர்க்குப் பாங்காவோம், சத்தகோடி மகாமந்திரேசுர ரெங்களுக்குப் பத்தாக்களாவார்கள். சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோ

மென்பது, அவர்களேவலால் அசுத்த மாயையைப் பிரேரியா நிற்போம்.

பாதாளமேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலரென்பது :—எண்பத்து நூறுயிரம் யோஜனையான பூமியின் கனத்தையும் சிவஞானமன்றியே தவசுபண்ணுகிறவர்கள் சென்றிருக்குமிடமாகிய கனிட்டபாதாளத்தையும் அதன் கீழேயுண்டாகிய அசுரகண்டம், சர்ப்பகண்டம், இராக்கதகண்டம் இப்படி யொவ்வொன்று மும்மூன்றுகண்டமாய் ஆடகேசுரர்க்குப் புவனமுமாயிருக்கிற யேழுபாதானத்துக்கும் அதன் கீழாக ரவுரவம் கும்பீபாகம் அவிசிகம் என்று சொல்லப்பட்டமயிரராசநரக மூன்றும் இவையுட்படப் பதின்மூன்று நரகமொரு அடுக்காகவும், பத்து நரகமொரு அடுக்காகவும், ஒன்பது நரகமொரு அடுக்காகவும் ஆக முப்பத்திரண்டு நரகமும் இவர்களைச் சூழ்ந்து சேவித்திருக்கிற நூற்றெட்டு நரகமுமாக நூற்றுநாற்பது நரகமுமாகக் கூர்மாண்டதேவரென்னும் உருத்திரர்க்குப் புவனமாயிருக்கப்பட்ட நரகபுவனங்களுக்குக் கீழ் காலாக்கினி யுருத்திரர் புவனம் பதினேழுகோடி யோஜனையாய் அண்டகடாக மூடப்பட்ட புவனமாயிருக்கும். இப்படி சொல்லப்பட்ட பிரமாண்டமுதலாக அண்டங்களனைத்துக்கும் ஆதார பூதமாய்ச் சிவசத்தியான ஆதார சத்திக்கும் அப்பாற் சிவனுடைய பூரணத்துக்கு எல்லைப்படுத்தி இன்னமட்டென்று சொல்லுதற்கு முடியாததலாற் சொற்கழிவாயிருக்கப்பட்டது மலர்போன்ற சீபாதம். போதார்புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவென்றது :—இனிப்பிருதிவியண்டம் முன்சொன்ன அண்டகடாகமுதல் ஐம்பதுகோடி யோஜனையுட்படமேற்புவலோகமுதல் சிவலோகமளவாக ஏழுலோகமுமேல் அண்டகடாகமுட்பட ஐம்பதுகோடி யோஜனையுமாகப் பிரமாண்டம் நூறுகோடி யோசனையாக அதற்குமேல் அதிற் பதின்மடங்கு அப்பு அண்டம் அதற்குமேல் அதிற் பதின்மடங்கு தேயு அண்டம் அதற்குமேல் பதின்மடங்கு வாயுவண்டம் அதற்குமேல் பதின்மடங்கு ஆகாச அண்டம் அதற்குமேல் பதின்மடங்கு மனவண்டம் அதற்குமேல் பதின்மடங்கு புத்தியண்டம் அதற்குமேல் பதின்மடங்கு ஆங்காரவண்டம் அதற்குமேல் பதின்மடங்கு குணவண்டம் அதின்மேல் நூறுமடங்கு பிரகிருதியண்டம் அதின்மேல் நூறுமடங்கு அராகவண்டம் அதின்மேல் நூறுமடங்கு வித்தையண்டம் அதின்மேல் நூறுமடங்கு கலையண்டம் அதின்மேல் நூறுமடங்கு நியதியண்டம் அதின்மேல் நூறுமடங்கு காலவண்டம் அதின்மேல் ஆயிரமடங்கு அசுத்த மாயை அதின்மேல் பதினுயிரமடங்கு சுத்த மாயை

